மொழிக்கு மொழி தித்திக்கும்

# மூவர் தமிழ் மாலை

மாலை—3 







உரையாசிரியர்:
ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா

உ

# விநாயகர் துதி



திருச்சிற்றம்பலம்

பிடியதன் உருஉமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை இறையே

திருச்சிற்றம்பலம்

— திருஞானசம்பந்தர்

இந்த திருப்பாடல் மூலம் விநாயகரைத் தியானித்துப் பின்னர் நால்வர் வணக்கங் கூறிப் பதிகங்களைப் படனஞ் செய்தல் நலம்.

உ

சைவசமயாசாரியர்

# நால்வர் துதி






திருஞான சம்பந்தர் | திருநாவுக் கரசர் | சுந்தர மூர்த்திகள் | மாணிக்க வாசகர்

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல் போற்றி

ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி

வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி

ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி

# திருஞானசம்பந்தர்



வம்பரு வரிவண்டு மணநாற
மலரும் மதுமலர் நற்கொன்றையான்
அடியலாற்பேணு எம்பிரான்
சம்பந்தன்

5-2

உ

சிவமயம்

ஓம் சம்பவே நம:

# மொழிக்கு மொழி தித்திக்கும்
# மூவர் தமிழ் மாலை

(சம்பந்தர், அப்பர், சுந்தரர் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிகவெளியீடு)

## மாலை—3

உரையாசிரியர்:
சிவபுராண ஞானபூஜகர், சாஸ்த்ர பிரசார பூஷணம்,
சிவபுராணச்சக்கரவர்த்தி
ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா
(சங்கரன் அடிமை)







திருஞானசம்பந்தர் குருபூஜை வெளியீடு
காளயுக்தி ஆண்டு வைகாசி மூலநாள்
24—5—1978

பிரசுரம்
ஆங்கீரஸ S வேங்கடேச சர்மா
5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு,
மேலமாம்பலம், சென்னை—600 033

முதல் பதிப்பு]  1978  [விலை ரூ. 2-00

# பொருளடக்கம்



## பரஞ்சோதி முனிவர் பாடிய
## திருஞானசம்பந்தர் துதி

**கடியவிழ் கடுக்கை வேணித் தாதைபோற் கனக்கண் மீனக்**
**கொடியனை வேவ நோக்கிக் குறையிரந்து அனையான் கற்பில்**
**பிடியன நடையாள் வேண்டப் பின்னுயிர் அளித்துக் காத்த**
**முடியணி மாடக் காழி முனிவனை வணக்கஞ் செய்வாம்.**

—திருவிளையாடற் புராணம்

தீவிழியால மீனக்கொடியினனான மன்மதனை நீருகும் படிப் பார்த்துப் பின்னர் கற்பின்ஒழுகும் அவனது மனைவி யான இரதி தேவியானவள் குறையிரந்து வேண்ட அம் மன்மதனை உயிர்கொடுத்துக் காத்த கொன்றையணிந்த சிவ பிரானாகிய தமது தந்தையாரைப் போலவே, மீனக் கொடி யினனான பாண்டியனை சுரநோய் பற்றுமாறு திருக்கண் நோக்கிப் பின்னர் அவனது கற்பிற்சிறந்த மனையாளாகிய பெண்யானை போன்றநடையினையுடைய மங்கையர்க்கரசியார் வேண்டப் பாண்டியனை உயிர்தந்து ரட்சித்த சீகாழிப்பதியில் அவதரித்த முனிவனாகிய திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமி களை வணக்கம் செய்வோம்.

5-2

உ

சிவனுண்டு பயமில்லை

# ஸமர்ப்பணம்



ஓம் ஸ்ரீ சம்பவே நம:

'நம: சம்பவே ச' என்று ஸ்ரீருத்திரத்தில் சிவ பெருமானுக்கு வணக்கங் கூறப்பட்டுள்ளது. சம்பு என்பதற்கு சுகங்கள் எல்லாவற்றிற்கும் இருப்பிட மானவர் என்பது பொருள். அத்தகைய பெருமானை சிவ அஷ்டோத்தர சத நாமங்களுள் மூன்றாவதான ஓம் சம்பவே நம: என்ற மந்திரத்தால் அருச்சித்து இந்த மூன்றாவது தமிழ்மாலையினை நமது பெருமா னுக்கு அணிவிக்கும் பேறு பெறுகின்றேன்.

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா

(சங்கரன் அடிமை)



நமது மூவர் தமிழ் மாலை வளர்ச்சியில் பேரார்வம்
காட்டும் அருளாளர், இருபதாம் நூற்றாண்டின்
இணையிலாப் பெருஞ்சித்தர்

**தவத்திரு காயத்திரி சுவாமிகள்**

## பக்திப்பாமாலை ஆசிரியர் அருட்கவி மஹேந்திரவாடி ரா. உமாசங்கரன் அவர்கள் எழுதுவது

சிவமயம்

மதிப்பிற்குரிய ஸ்ரீ சர்மா அவர்களுக்கு அனேக நமஸ்காரங்கள்.

'மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ்மாலை' என்ற பெயரில் தாங்கள் வெளியிட்டுள்ள இரண்டு தமிழ்மாலைகளைக் கண்டு பெரிதும் பரவசமடைந்தேன். அரசாங்கமோ, பல்கலைக்கழகமோ அல்லது பெரும் வ'சதிகள் படைத்த ஒரு பதிப்பகமோ மட்டுமே செய்யக்கூடிய ஒரு அரிய செயலை தாங்கள் தனி ஒருவராக செய்ய முற்பட்டிருப்பது திருவருளின் செயலேயன்றி வேறில்லை. நிச்சயமாக சைவ உலகினுக்கும் திருமுறை ஆசிரியர்கள் வளர்த்த தமிழ்மொழிக்கும் பெரிதும் பயனளிக்கும் சிறந்த தொண்டு இதை விட வேறு ஒன்றிருக்கக் கூடுமென நான் நினைக்கவில்லை. இத்தகைய சிறந்த தெய்வத் தொண்டினை சிறப்புடன் தாங்கள் விரைவிலேயே முடித்து ஏனைய திருமுறைப்பணிகளையும் தொடர ஈசன் அருள் புரிவான் என்பது திண்ணம். தங்களுடைய நூலினைப் படித்த பிறகு அடியேனுடைய மனதில் எழுந்த ஒரு பாடலைக் கீழே தந்துள்ளேன்.

பல்லவி

மூவர் தமிழ் மாலை
முக்கனிச் சாறு கலவையாகும். (மூவர்)

அனுபல்லவி

முக்கண்ணன் புகழ்பாடும்
முக்ய சைவ மறையாகும். (மூவர்)

சரணம்

முதுபெரும் மறையான திருமுறையாகும்
முழுவதும் மூவர்தம் மந்திரமாகும்
முப்போதும் இதனை ஓதியுணர்ந்து
முப்புரம் எரித்தவன் தொண்டராவோம்.
(மூவர்)

'பத்மாலயம்'
7/188, காளியம்மன்
கோயில் வீதி,
போரூர்—602104.

இங்ஙனம்
அன்பன்
மஹேந்திரவாடி
ரா. உமாசங்கரன்

சிவம்



உ

சிவமயம்

சிவனுண்டு பயமில்லை

# உரையாசிரியர் பணிவுரை

திருச்சிற்றம்பலம்

அரியோடு நான்முகத்தோன் ஆதிசுரர்க் கெல்லாம்
தெரியாமை செந்தழலாய் நின்ற— ஒருவன்சீர்
தன்தலையின் மேல்தரித்த சம்பந்தன் தாளிணைகள்
என்தலையின் மேலிருக்க என்று.

திருச்சிற்றம்பலம்

நம்பியாண்டார் நம்பிகள் பாடிய
ஆளுடைய பிள்ளையார் திருமும்மணிக்
கோவை : 11-ம் திருமுறை

மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ்மாலை வெளியீட்டில் மூன்ருவது தமிழ்மாலை வண்டமிழால் எழுதும் மறைமொழிந்த எங்கள் இனிய பிரான் திருஞானசம்பந்தரின் குருபூசை தினமான வைகாசி மூலம் நன்ளுளில் வெளிவருவதும் ஒரு சிறப்புமிகு பொருத்தமேயாகும். இந்த மூன்ருவது தமிழ் மாலையினை இரண்டாவது மாலையைக் காட்டிலும் சிறிது விரைவாகவே வெளியிட இயன்றதும் அடியேனது நல்வினைப் பயனுகவே கொள்கிறேன். இனி நான்காவது மாலையினை இன்னும் விரைவில் கொணர்வதுடன் இந்த 1978 ஆண்டு இறுதிக்குள் குறைந்தது எட்டு மாலைகளையாவது கொண்டுவர வேண்டும் என்பது அடியேனது ஸங்கல்பம். திருவருள் துணைநின்று பூர்த்திசெய்து தரவேண்டும்.

திருச்சாய்க்காட்டுத் திருப்பதிகங்கள் இரண்டு, திருவெண்காட்டுத் திருப்பதிகங்கள் இரண்டு, தென் திருமுல்லைவாயில் திருப்பதிகம் ஒன்று. சீகாழியில் பாடியருளிய தூய ஆணியாம் பதிகம் எனச் சான்றோர்களால் எண்ணப்படுகிற இரண்டு திருப்பதிகங்கள் ஆக ஏழு திருப்பதிகங்கள் இந்த மூன்றாவது தமிழ்மாலையில் இடம்பெற்றுள்ளன. சென்ற இரண்டு தமிழ் மாலைகளைக் காட்டிலும் அதிகமாகவே தேவையான பாடல்களுக்கு விளக்கம் தந்துள்ளேன். இனியும் பலவிசேடங்களையும் சேகரித்து பக்தர்களுக்கு எவ்வளவு பயனுள்ளதாக அமைக்க முடியுமோ அப்படி அமைக்க அதே சிந்தனையாக தோடுடைய செவியன் திருவருளையும் திருஞானசம்பந்தரின் திருவருளையும் பிரார்த்தித்த வண்ணமாகவே உள்ளேன்.

நமது முதலிரண்டு தமிழ்மாலைகளைக் கண்ணுற்ற சமயப்பற்றும் திருமுறைப்பற்றும் மிக்க பெரியோர்கள் இந்த எளியேனது முயற்சியினைப் பெரிதும் பாராட்டியும் மேலும் பதிப்புகள் சிறந்த முறையில் விளங்கச் சீரிய பல ஆலோசனைகளையும் வழங்கியுள்ளனர். அவர்கட்கெல்லாம் என்னுடைய அன்பு கலந்த வணக்கங்களையும் நன்றியையும் தெரிவித்து ஆலோசனைகளை எல்லாம் நடைமுறையில் இயன்றவரை ஏற்றுப் பதிப்புகளை அமைப்பேன் என்று உறுதி கூறுகிறேன். சில அன்பர்கள் அடியேன் மேற்கொண்டுள்ள தாங்கரும் சுமையின் அருமை நோக்கி நம்மீது பரிவுடன் கடிதம் எழுதியுள்ளார்கள். அக்கடிதங்களைப் படிக்கும்தோறும் நெஞ்சம் நெகிழ்ந்து அன்பர்களது அன்பு நோக்கிப் பரவசமடைகின்றேன். சில கடிதங்களின் பகுதிகளையாவது இடங்கிடைப்பின் பிரசுரிக்க எண்ணியுள்ளேன்.

திருமுறைகளின் பெருமையினையும் அடியேனது சிறுமையினையும் பலமுறைகள் எண்ணிப் பார்த்து இப்பணியினை நம்மால் ஏற்று முடிக்க இயலுமா என்ற அச்சங்காரணமாக இப்பணியினை மேற்கொள்ளாது சென்ற மூன்றாண்டுகளாகக் காலந்தாழ்த்தி தற்சமயம் திருவருள் கூடிய காரணத்தால் ‘முன்னவனே முன்னின்றால் முடியாததும் உளதோ’’ என்ற சேக்கிழார் பெருமானின் தெய்வ வாக்குத் தாரகமந்திரமாக ஒலிக்கத் திடமுடன் இப்பணியினைத் துவக்கி விட்டேன். ‘‘சிவனுண்டு பயமில்லை’’ என்றே சிந்தித்து வருகிறேன்.

அம்மையப்பன் திருவருளும் அவ்வருள் வழி கிடைக்கும் அவன் அன்பர்களது ஆதரவும் துணை நிற்க இப்பணி சீரிய முறையில் நிறைவுற்றுப் பின்னர் ஏனைய பல சைவ இலக்கியப் பணியினையும் தொடர முடியும் என்று திடமாக நம்புகிறேன்.

இந்தத் தெய்வத் தமிழ் மாலைகளைப் பெறும் அன்பர்கள் சமயப்பற்று மிக்க தமது நண்பர்கள், உறவினர்கள் ஆகியோருக்கு இவைகளை அறிமுகம் செய்து அவர்களது ஆதரவும் நமக்குக் கிடைக்குமாறு செய்ய வேண்டுகிறேன். தங்கள் இல்லங்களில் நிகழும் சுப நிகழ்ச்சிகளின் போது நமது தமிழ் மாலைப் பணிக்கும் ஒரு சிறு நன்கொடை அளித்து உதவும்படியும் வேண்டுகிறேன்.

‘‘ஆழ்க தீயது எல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே.’’

இங்ஙனம்

சென்னை-600033
17-5-1978

சங்கரன் அடிமை
ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா

## ஆசிரியரின் இதர பிரசுரங்கள்

| | | |
|---|---|---|
| 1. | ஸ்ரீ சங்கர ஜயந்தி மலர் | 1968—1-00 |
| 2. | ,, | 1969—1-00 |
| 3. | ,, | 1970—2-50 |
| 4. | ,, | 1971—2-50 |
| 5. | ,, | 1972—2-50 |
| 6. | ,, | 1976—4-00 |
| 7. | ,, | 1977—5-00 |
| 8. | ,, | 1978—5-00 |

1973, 1974, 75 ஆண்டு மலர்கள் கைவசமில்லை.

சலுகை விலை ரூபாய் 18/- நன்கொடையாக அனுப்பும் நேயர்களுக்கு மேற்கண்ட 8 மலர்களும் கைவசமுள்ள இரண்டொரு இலவச வெளியீடுகளும் சேர்த்து அனுப்பி வைக்கப் படும். தபால் செலவு ரூ. 2—00 தனி.

| | | |
|---|---|---|
| 9. | ஸ்ரீ சங்கர பகவத்பாத விஜயம் (சிவோத்கர்ஷ வர்ஷக ப்ரம்மஸ்ரீ P. N. நாராயண சாஸ்திரிகள் எழுதியது.) | ரூ. 0—60 |
| 10. | அருள்மொழிக்கோவை | ரூ. 0—50 |
| 11. | சிவநாம மஹிமை | ரூ. 0—60 |
| 12. | தேவியின் தத்துவம் | ரூ. 0-40 |
| 13. | காரிய சித்தி தரும் கணபதி ஸ்தோத்ரம் | ரூ. 0—15 |
| 14. | ஸ்கந்த லஹரி | ரூ. 1-00 |
| 15, | பக்திப்பாமாலை | ரூ. 1—00 |

தபால் செலவு முதல் எட்டு நூல்களுக்கும் சேர்த்து ரூ. 2 மீதி உள்ளவைகளுக்குப் பிரதி 1க்கு 10 காசுகள்.

தபால் செலவு உள்பட தேவையான புத்தகங்களின் விலையை M. O. மூலம் அனுப்பவும்.

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா
5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு,
மேல மாம்பலம், சென்னை-600 033.

## இப்பதிப்பில் வந்துள்ள தலங்களின் மகிமை

(சுருக்கம்)

இந்த மூன்ருவது தமிழ்மாலையில் திருச்சாய்க்காடு, திருவெண்காடு, தென்திருமுல்லைவாயில் ஆகிய மூன்று தலங்களின் பதிகங்களும், சீகாழியில் பாடிய பதிகங்களில் "ஆணியாம் திருப்பதிகம்' எனக் கருதப்படும் பதிகங்கள் இரண்டும் இடம் பெற்றுள்ளன. சீகாழி, திருவெண்காடு ஆகிய தலங்களைப் பற்றிய குறிப்புகள் முன்னமே முதலாவது தமிழ்மாலையில் கொடுக்கப்பட்டுள்ளதால் எஞ்சிய இரண்டு தலங்களின் மகிமை மட்டும் ஈண்டுக் கொடுக்கப்படுகின்றன.

### 1. திருச்சாய்க்காடு

இது சாயாவனம் எனவும் பெயர் பெறும். ஆதிசேடனது நாகமணி ஒளி வீசியதால் இப்பெயர் பெற்றது என்பர். (சாய்-ஒளி). மற்றும் சாய் என்பதற்குத தமிழில் கோரை (சாய்க்கோரை) என்று பொருள். (திரு ச. பவாநந்தம் பிள்ளை அவர்களின் தமிழ்-தமிழ் அகராதி காண்க.) எனவே கோரைக் காடு நிறைந்த இடம் சாய்க்காடு எனப்பட்டுத் திரு என்ற தெய்வ அடைமொழியுடன் கூடித் திருச்சாய்ககாடு ஆயிற்று.

தமிழ் நாட்டில் காசிக்குச் சமானமாக எண்ணப்படும் ஆறு தலங்களில் இதுவும் ஒன்று. மற்றவை திருமறைக்காடு (வேதாரணியம்), திருவையாறு,

திருமயிலாடுதுறை (மாயூரம்), திருவிடைமருதூர் (மத்தியார்ச்சுனம்), திருவாஞ்சியம் (ஸ்ரீ வாஞ்சியம்) என்பவையாகும். இத்தலங்களில் இறப்பவர்களும் காசியைப் போலவே மீண்டும் பிறவாது முத்தியடைவர் என்பதால் இவை காசிக்குச் சமானமாகின்றன.



திருச்சாய்க்காடு திருக்கோயில்

இத்தலத்துப் பெருமான் சாயாவனேசுவரர், அமுதேசுவரர் எனவும் வழங்கப் பெறுவர். தினமும் இங்கு வந்து பூசித்த தனது தாயாரது சிரமத்தைப்போக்கக் கருதிய தேவேந்திரன் சிவலிங்கத் திருமேனியினைத் தேவவுலகிற்குக் கொண்டுபோக எண்ணிப் பாதாளம்வரை தோண்டியதாயும்

அவரது திருமேனி அதற்கு மேலும் ஊடுருவிச் சென்று நாகராசனின் முடியின் மணி ஒளிவீசிய தென்றும் அதனால் அச்சங் கொண்ட இந்திரன் முன்போலவே இறைவரைத் தாபித்துத் தனது உலகிற்குச் சென்றனன் என்றும் கூறப்படுகிறது. உபமன்னிய முனிவர் மற்றும் ஐராவதம் பூசித்துப் பேறுபெற்ற தலமிது. மேலும் இத்தலத்துப் பெருமைகளும், வரலாறுகளும் பழந்தமிழ்ச் சங்க நூல்களில் பெரிதும் பேசப்பட்டுள்ளன.

காவிரியின் வடகரைத் தலங்களில் ஒன்பதாவது தலமான இது மாடக்கோயில்களுள் ஒன்றாகும். சீகாழிக்குத் தென்கிழக்கே சுமார் 15. கி மீ தொலை விலும் மாயூரத்தினின்றும் காவிரிப்பூம்பட்டினச் சாலையில் சுமார் 30 கி. மீ. தொலைவிலும் உள்ளது.

திருஞானசம்பந்தர் பதிகங்கள் இரண்டும், அப்பர் பெருமானின் பதிகங்கள் இரண்டும் பெற்றது இத்தலம். ஐயடிகள் காடவர் கோன் நாயனாரும் தமது க்ஷேத்திரத் திருவெண்பாவில் பின்வருமாறு பாடியுள்ளார்.

அஞ்சனஞ்சேர் கண்ணார் அருவருக்கும் அப்பதமாய்க்
குஞ்சி வெளுத்துடலங் கோடாமுன்—நெஞ்சமே
போய்க்காடு கூடப் புலம்பாது பூம்புகார்ச்
சாய்க்காடு கைதொழுநீ சார்ந்து.

காவிரிப்பூம்பட்டினத்துச் சாய்க்காடு என வழங்கப்படும் இத்தலத்தின் தீர்த்தம் கடற் சங்கமத்துறையும், கோயில் எதிரிலேயே உள்ள ஐராவதத் தீர்த்தமும் ஆகும். வேலாயுதக் கடவுளான குமரன் வில்லேந்திய கையனாய்க் காட்சி தரும் உற்சவ விக்கிரகத்தின் அற்புதக் கோலத்தை

இக்கோயிலில் கண்டு மகிழலாம். இயற்பகை நாயனுர், அவரது மனைவியார் திருவுருவங்கள் இங்கு உள்ளன. திருக்கோயிலின் முன்புறம் தேர் போன்ற அமைப்பினை உடையதாயிருத்தலைக் காணலாம்.

## 2. தென் திருமுல்லைவாயில்

தொண்டை நாட்டில் உள்ள திருமுல்லைவாயிலி னின்றும் பிரித்துணர தென் திருமுல்லைவாயில் என வழங்கப்படுகிறது. காவிரித் தென்கரைத் தலங் களில் இது ஏழாவது ஆகும். சீகாழிக்குக் கிழக்கு சுமார் 13 கி.மீ. தூரத்தில் கடற்கரையில் இருக் கிறது. தல விருட்சம் முல்லை. உமாதேவியார் வழி பட்டுத் தட்சிணமூர்த்தியிடம் திருவைந்தெழுத்து உபதேசம் பெற்ற தலம். இந்திரனும் சுதர்மன் என் பானும் பூசித்துப் பேறு பெற்ற தலம் என்றும் கூறுவர்.

கோயிலுக்கும் கடற்கரைக்கும் இடையே சிந்த னைப் பிள்ளையார் கோயில் என்ற ஒரு கோயில் உள்ளது. வடக்கே நந்தகோபால தீர்த்தம் என்ற குளம் இருக்கிறது. மஹோதயம், கிரஹணம் போன்ற புண்ய காலங்களில் ஏராளமான மக்கள் இங்கு கடலில் ஸ்நானம் செய்கின்றனர்.

—சிவம்—



உ

சிவமயம்

சிவனுண்டு பயமில்லை



# மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ் மாலை—3

## திருஞானசம்பந்தர் அருளிய திருப்பதிகங்கள்

(முன் மாலைகளின் தொடர்ச்சி)

திருச்சாய்க்காடு, திருவெண்காடு, தென் திரு முல்லைவாயில் ஆகிய திருத்தலங்களில் அருளிய திருப்பதிகங்களும் சீகாழியில் அருளிய தூய ஆணியாம் திருப்பதிகங்கள் இரண்டும் அடங்கியது.

கவுணியர்கோன் திருவடிகளே சரணம்



திருச்சிற்றம்பலம்

வீதிபோக் காவன வினையை வீட்டுவ்வன
ஓதியோர்க்கு அகப்படா பொருளையோ விப்பன
தீதில்தே வன்குடித் தேவர்தே வெய்திய
ஆதியந் தம்மிலா அடிகள்வே டங்களே.

திருச்சிற்றம்பலம்

—திருஞானசம்பந்தர் அருளியது
(3-ம் திருமுறை)

உ

சிவமயம்

# திருச்சாய்க்காடு—1

திருச்சிற்றம்பலம்

பண்–சீகாமரம்] [2-ம் திருமுறை

மண்புகார் வான்புகுவர்
மனமிளையார் பசியாலுங்
கண்புகார் பிணியறியார்
கற்றாருங் கேட்டாரும்
விண்புகா ரெனவேண்டா
வெண்மாட நெடுவீதித்
தண்புகார்ச் சாய்க்காட்டெந்
தலைவன்தாள் சார்ந்தாரே 1

போய்க்காடே மறைந்துறைதல்
புரிந்தானும் பூம்புகார்ச்
சாய்க்காடே பதியாக
உடையானும் விடையானும்
வாய்க்காடு முதுமரமே
இடமாக வந்தடைந்த
பேய்க்காடல் புரிந்தானும்
பெரியோர்கள் பெருமானே 2

நீநாளும் நன்னெஞ்சே
நினைகண்டாய் யாரறிவார்
சாநாளும் வாழ்நாளுஞ்
சாய்க்காட்டெம் பெருமாற்கே
பூநாளுந் தலைசுமப்பப்
புகழ்நாமஞ் செவிகேட்ப
நாநாளும் நவின்றேத்தப்
பெறலாமே நல்வினையே 3

கட்டலர்த்த மலர்தூவிக்
    கைதொழுமின் பொன்னியன்ற
தட்டலர்த்த பூஞ்செருந்தி
    கோங்கமருந் தாழ்பொழில்வாய்
மொட்டலர்த்த தடந்தாழை
    முருகுயிர்க்குங் காவிரிப்பூம்
பட்டினத்து சாய்க்காட்டெம்
    பரமேட்டி பாதமே. 4

கோங்கன்ன குவிமுலையாள்
    கொழும்பணைத்தோட் கொடியிடையைப்
பாங்கென்ன வைத்துகந்தான்
    படர்சடைமேற் பால்மதியந்
தாங்கினன் பூம்புகார்ச்
    சாய்க்காட்டான் தாள்நிழற்கீழ்
ஓங்கினர் ஓங்கின
    ரெனவுரைக்கும் உலகமே 5

சாந்தாக நீறணிந்தான்
    சாய்க்காட்டான் காமனைமுன்
தீந்தாகம் எரிகொளுவச்
    செற்றுகந்தான் திருமுடிமேல்
ஒய்ந்தார மதிசூடி
    ஒளிதிகழும் மலைமகள்தோள்
தோய்ந்தாகம் பாகமா
    உடையானும் விடையானே 6

மங்குல்தோய் மணிமாடம்
    மதிதவழும் நெடுவீதிச்
சங்கெலாங் கரைபொருது
    திரைபுலம்புஞ் சாய்க்காட்டான்

கொங்குலா வரிவண்டின்
இசைபாடு மலர்க்கொன்றைத்
தொங்கலான் அடியார்க்குச்
சுவர்க்கங்கள் பொருளலவே 7

தொடலரிய தொருகணையாற்
புரமூன்றும் எரியுண்ணப்
படஅரவத் தெழிலாரம்
பூண்டான்பண் டரக்கனையும்
தடவரையால் தடவரைத்தோ
ளூன்றினன் சாய்க்காட்டை
இடவகையால் அடைவோமென்
றெண்ணுவார்க் கிடரிலையே 8

வையநீ ரேற்றானும்
மலருறையும் நான்முகனும்
ஐயன்மார் இருவர்க்கும்
அளப்பரிதால் அவன்பெருமை
தையலார் பாட்டோவாச்
சாய்க்காட்டெம் பெருமானைத்
தெய்வமாப் பேணாதார்
தெளிவுடைமை தேறோமே 9

குறங்காட்டு நால்விரலில்
கோவணத்துக் கோலோவிப்போய்
அறங்காட்டுஞ் சமணருஞ்
சாக்கியரும் அலர்தூற்றுந்
திறங்காட்டல் கேளாதே
தெளிவுடையீர் சென்றடைமின்
புறங்காட்டில் ஆடலான்
பூம்புகார்ச் சாய்க்காடே 10

நொம்பைந்து புடைத்தொல்கு
நூபுரஞ்சேர் மெல்லடியார்
அம்பந்தும் வரிக்கழலும்
அரவஞ்செய் பூங்காழிச்
சம்பந்தன் தமிழ்பகர்ந்த
சாய்க்காட்டுப் பத்தினையும்
எம்பந்த மெனக்கருதி
ஏத்துவார்க் கிடர்கெடுமே 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி : சாயாவனேசுவரர்

தேவி : குயிலினும் நன்மொழியாள்

அடுத்துவரும் திருப்பதிகமும் திருச்சாய்க்காட்டிலேயே அருளிச் செய்ததாகும்.

**பதிகவரலாறு :**

காவிரிப்பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரத்தில் பாம்புகளை ஆபரணமாகப் பூண்ட சிவபிரானுரைத் தமது முடியால் வணங்கித்துதித்து அங்கு இசையமைந்த பதிகங்களைப் பாடிய பின்னர், காவிரி சூழும் புகார் என்னும் காவிரிப்பூம்பட்டினத்தில் உள்ள திருச்சாய்க்காடு என்னும் தலத்தில் தொண்டர் குழாம் வந்து மகிழ்ச்சியுடன் எதிர் கொள்ளப் புகுந்தார். திருக்கோயிலை வலமாக வந்து வானளவும் உயர்ந்த திருவாயிலினுள் பிரவேசித்துக் கொன்றைமாலையினை அணிந்த சிவபெருமான் திருமுன்பு சென்று வணங்கி 'மண்புகார்' எனத் தொடங்கும் திருப்பதிகத்தினைப்பாடிக் கற்பவர்களும் கேட்பவர்களும் ஆகிய எல்லோருடைய ஊனும் உயிரும் உருகும் படித் துதித்துத் தமது திருக்கரங்களை உச்சிமேற்குவித்து வணங்கினர்.

**பதிகப்பொழிப்புரை :**

1. வெண்மையான மாடங்கள் நிறைந்த நீண்ட வீதிகளையுடைய குளிர்ச்சி மிக்க புகார் நகரத்துச் சாய்க்காட்டில்

கோயில் கொண்ட எமது தலைவனாகிய சிவபெருமானின் புகழைக் கற்பாரும் கேட்பாருமாகிய திருவடிகளைச் சார்ந்தவர் கள் மீண்டும் மண்ணுலகில் பிறக்கமாட்டார்கள். நிலவுலகத் தில் வாழுங் காலத்திலும் துன்பங்களால் மனம் வருத்த மாட்டார்கள்; (அதாவது மனதை வருத்தும் துன்பங்கள் அவர் களை வந்து அணுகா என்பது கருத்து). பசியாலும் இடுக் கண் அடையமாட்டார்கள். உடலினை வருத்தும் நோய்களை யும் அறியமாட்டார்கள். நிலவுலகினை விட்டுச் செல்லும்போது சிவலோகம் சென்று அடைவார்கள். இத்தகைய அடியவர் கள் சுவர்க்கபோகம் என்று கூறப்படும் இன்பம் அனுபவிக் கும் தேவருலகத்துக்கும் செல்லமாட்டார்கள் என்பதைக் கூற வேண்டுவதேயில்லை.

திருச்சாய்க்காட்டுத் தலைவனின் தாள்களைச் சார்ந்தார்க்கு மீண்டும் பிறப்பில்லை என்பதால் அவர்கள் சிவலோகம் சேர் வார்கள் என்று கூறியதாயிற்று. எனவே அவர்கள் போகம் கொடுப்பதும் நல்வினை தீர்ந்ததும் மீண்டும் உலகில் பிறப் பதற்கு ஏதுவாகிய தேவருலகத்துக்குச் செல்லமாட்டார்கள் என்பதைக் கூறவும் வேண்டுமோ? வேண்டா என்றவாறு. நிலவுலகத்தே வாழுங்காலத்திலும் அவர்கள் மனம் இளைதல், பசியால் வாடுதல், நோய்களால் வருத்தப்படல் ஆகிய துன் பங்களை அடையமாட்டார்கள். எனவே இம்மை, மறுமை ஆகிய இரண்டுக்கும் ஏதுவாகிய திருச்சாய்க்காட்டுத் தலை வனின் தாள்களைச் சேர்க என்றும், அங்ஙனம் சேரும் நெறி யினையும் ஆசாரியர் இத்திருப்பதிகத்தில் கூறியருளி மக்களை நல்வழிப்படுத்தி அருளியுள்ளமை காண்க. பின்னுல் வரும் பாடல்களில் அவன் புகழ் கற்க, அவன் திருநாமம் கேட்க, அவனை நினைக்க, பூச்சுமந்து வணங்க, அவனது நாமம் செபிக்க என்றெல்லாம் அருளியிருத்தலை மக்கள் அனைவரும் பின்பற்றி நல்வாழ்வு அடையக்கடவர்.

'புகார்ச்சாய்க்காடு' என்றது புகார் என்னும் காவிரிப்பூம் பட்டினத்தைச் சார்ந்திருத்தலால் அதனுடன் சேர்த்துச்

சொல்லியதாகும். முன்னரும் காவிரிப்பூம்பட்டினத்துப் பல்லவனீச்சரம் என்று கூறியது இது பற்றியேயாகும்.

முதல்மூன்று அடிகளில் வந்துள்ள 'புகார்' என்ற சொல் புகமாட்டார்கள் என்று பொருள்படும் எதிர்மறை வினைமுற்று. நான்காவது அடியில் வந்துள்ள 'புகார்' காவிரிப்பூம் பட்டினத்தின் மற்ருெரு பெயராகும்.

2. காட்டிலே போய் மறைந்து உறைதலை விரும்பினவனும், பூம்புகார் நகரத்தைச் சார்ந்த சாய்க்காட்டினைத் தனது இருப்பிடமாகக் கொண்டவனும், விடையேறும் பெருமானும், காட்டில் உள்ள பழைய மரத்தினை தனக்கிருப்பிடமாகக் கொண்டு வந்தடைந்த பேய்களின் பாடலுக்குத் தக்க ஆடலைப் புரிந்தவனும், கற்றல் கேட்டல் உடையவர்களாகிய பெரியோர்கள் தமது தலைவனுகக் கொண்ட பெருமானுகிய சிவபெருமானுகும்.

முதுமரம் என்பதற்கு ஆலமரம் என்றும் பொருள் காணப் பட்டுள்ளது. பெரியோர்கள் என்பதற்கு மானிடரினும் பெரியவர்களாகிய தேவர்கள் எனக்கொண்டு தேவர்கள் தலைவன்—தேவதேவன்— மகாதேவன் எனக் கொள்ளுதலும் அமையும்.

3. நல்ல எனது நெஞ்சமே! தாம் வாழப் போகின்ற நாட்கள் எத்தனை என்பதையும், சாகும் நாள் எது என்பதனையும் யாரே அறியவல்லார். (ஒருவரும் அறியவல்லர் அல்லர் என்பது கருத்து) எனவே நீ வாழுகின்ற நாட்களிலேயே தினந்தோறும் சிவபெருமானை நினைப்பாய். அவனுக்கே நாளும் பூச்சுமப்பாய். செவிகள் அவனது புகழ்களையும் திருநாமங்களையும் கேட்கச் செய். நாவானது அவனைப்பற்றிய பெருமைகளையும் அவனது பெயர்களையுமே நாளுங்கூறித் துதிக்கட்டும். இம்மாதிரி செய்யும் நல்வினையைப் பெறுவோம்.

உலகில் ஒருவர் எவ்வளவு காலம் இருப்பர் என்பதும் என்றையதினம் இறப்பர் என்பதும் எவரும் அறியாததொரு விஷயமாகையால், ஒருவன் தான் வாழும் நாளிலேயே நல் வினைப்பயனால் சிவபிரானது திருவடித்தியானம், பூக்களைச் சுமந்து கொண்டு வந்து அருச்சித்தல், அவனது நாமமும் மூர்த்தி அவனிருக்கும் வண்ணமும் கேட்டல், நாவினால் அவனது திருப்பெயர்களையும் நாத்தழும்பேறக் கூறுதல் முதலிய சீரிய சிவபுண்ணியங்களை முனைந்து தேடிக்கொள்ள வேண்டும் என்று தனது நெஞ்சிற்கு அறிவுறுத்துவது போன்று உலகுக்கு உபதேசித்தருளியவாறு காண்க.

'நன்னெஞ்சே நினை கண்டாய்' என்பதனை 'யாரறிவார் சாநாளும் வாழ்நாளும்' என்பதோடு இணைத்தால் நல்ல நெஞ்சமே! சா நாளும் வாழ்நாளும் யாரறிவார் என்பதனை நினைத்துப் பார்த்து இப்போதே அவன் பணி செய்யத் தொடங்குவாய் என்ற பொருள் கிடைக்கும்.

'புகழ் நாமம்' என்பதற்கு பெருமானது புகழ்களுக்குரிய வரலாறுகளைத் தன்னுள் கொண்ட திருநாமங்கள் என்றும் பொருள் கொள்ளலாம். உதாரணம்: சந்திரசேகரன், கங்காதரன், திரிபுராந்தகன், அந்தகாசுரசூதனன், கங்காளன் போன்றவை. ஒவ்வொரு திருநாமமும் புகழ்க்குரியதே எனினும் பல திருநாமங்கள் வரலாறுகளை உள்ளடக்கியனவாக உண்மை காண்க.

4. பொன்னால் ஆகிய தட்டுப்போல் பூத்த பூக்களாகிய செருந்தி, கோங்கு முதலிய நிறைந்த தாழ்ந்த பொழில்களினிடத்தே தாழை அரும்புகள் மலர்தலால் மணத்தினைப் பரப்பும் காவிரிப்பூம்பட்டினத்துச் சாய்க்காட்டில் கோயில் கொண்டுள்ள தனக்கு மேல் பரம் இல்லாத இறைவனாகிய பரமேச்வரனின் திருப்பாதங்களை கட்டு விரிந்து மலர்ந்த மலர்களைத் தூவி வழிபட்டுப்பூசை செய்யுங்கள்.

'கட்டு அலர்ந்த' என்பது அரும்புகளின் கட்டு அதாவது பிணிப்பு நீங்கி பூக்களாக மலர்தல். பரமேட்டி மேலான

இடம்; புகலடைவதற்கு சிவபெருமானுக்கு மேல் வேறு இடம் இல்லை என்பது கருத்து.

இத்திருப்பாடல் உலகத்தவரை சிவபூஜை செய்து உய்யுங்கள் என்று நல்வழிப்படுத்துவற்தகாக அருளிச் செய்தார் என்க.

5. கோங்கின் அரும்பு போன்று குவிந்த கொங்கைகளை உடையவளும், செழித்த மூங்கில் போலும் தோளும் கொடி போன்று துவளும் இடையினை உடையவளுமான உமாதேவியாரைத் தனது ஒரு பக்கத்திலே வைத்து மன மகிழ்ந்தவன். படர்ந்த தனது சடைமுடி மேல் பால்நிறமுள்ள சந்திரனைத் தாங்கினவன். பூம்புகார்ச்சாய்க்காட்டினைக் கோயிலாகக் கொண்டவன். அவனது தாளின் நிழற்கீழ் ஓங்கினவரே உண்மையில் ஓங்கினவர் ஆவர் என்று உலகத்தவர் கூறுவர். உலகத்தவர் என்பது ஈண்டு உலகத்து நன்மக்களைக் குறிக்கும்.

இறைவனது தாள் நிழலில் ஓங்குதல் என்பது அவனிடம் பக்தி செய்து அவனுக்கு அடிமை செய்வதில் முந்துதலால் உயர்வடைதல். அதுவே உண்மையான உயர்வு. மற்று எவ்வகையில் உயர்வு அடைந்தாலும் அது உயர்வாகாது என்று அருளிச் செய்தபடி.

6. சந்தனம் போன்று திருநீற்றினைப் பூசியவனும், திருச்சாய்க்காட்டில் கோயில் கொண்டவனும், மன்மதனின் உடம்பினைத் தீய்ந்து எரிகொளுவச் செய்து உவந்தவனும், தனது திருமுடிமேல் தக்கன் சாபத்தினின்றும் ஒய்வு பெற்றுத்தங்கிய பிறைச்சந்திரனைச் சூடியவனும், ஒளியுடன் கூடிய மலைமகளின் தோள்களைத்தழுவி அவ்வம்மையைத் தனது பாகமாக உடையவனும் விடையேறும் பெருமானுகிய சிவபிரானேயாகும்.

7. சந்திரன் உலவுவதும் மேகத்தைத் தொடுவதுமான அழகிய மாடங்கள் நிறைந்த நெடிய வீதிகளையுடையதும், சங்குகள் கரையினைத் தாக்கி அலைகள் ஒலிப்பதுமான திருச்

சாய்க்காட்டுப் பெருமானும், தேன் நிறைந்ததும், அதனை உண்ண அழகிய வண்டுகள் இசைபாடுவதுமாயுள்ள கொன்றைப்பூக்களாலான அழகிய மாலையினை அணிந்தவனுமான சிவபிரானது அடியார்களுக்குச் சுவர்க்கலோகத்து இன்பங்கள் ஒருபொருளாக ஆகாது.

சிவபிரானின் திருவடிகளைச் சார்ந்து அடையும் பேரின்பமே சிறந்தது ஆதலால் நல்வினைப்பயன் முடிந்ததும் அழிந்து மீண்டும் மண்மேல் பிறத்தற்கேதுவாய சுவர்க்க போகத்தை அடியார்கள் விரும்பமாட்டார்கள் என்றவாறு. முதல் திருப்பாடலில் 'வான்புகுவர் விண்புகாரென வேண்டா' என்று அருளியதுங்காண்க.

8. பிறரால் தொடற்கரிய ஒருகணையினுல் மூன்று புரங்களையும் எரியுண்ணச் செய்தவன். படத்தினை உடைய பாம்பினை அழகிய மாலையாகப் பூண்டவன். முன் அரக்கனுகிய இராவணனையும் அவனது மலைபோன்ற தோள்களையும் திருக்கயிலாய மலையினைத் தனது கால்விரலால் அழுத்திய பரமன். அவனது பதியாகிய திருச்சாய்க்காட்டினையே வழிபடும் இடமாகச் சென்று சரணடைவோம் என்று எண்ணுபவருக்குத் துன்பங்கள் இல்லையாம்.

'தொடலரிய' என்பதற்குப் பிறரால் தொடுத்தற்கரிய என்று பொருள் கொள்ளலாம். இடர்கள் என்பது இப்பிறவியில் வாழ்நாளில் வரும் துன்பங்கள் மட்டுமன்றிப் பின்னர் வரும் பிறவியாகிய துன்பங்களையுங்குறிக்கும்.

9. இப்பூவுலகம் முழுமையையும் நீரோடு (மாபலிச் சக்கரவர்த்தியிடமிருந்து) தானமாக ஏற்றவனுகிய திருமாலும், தாமரைமலரில் உறைபவனுகிய பிரமதேவனும் ஆகிய இரு தலைமைத் தேவர்களுக்குங்கூட அளத்தற்கு அரியதாகியதால் (அத்தகைய) அவனது பெருமை பெண்களால் இடைவிடாது பாடப்படுகின்ற திருச்சாய்க்காட்டுச் சிவபெருமானைத் தமது வழிபடு தெய்வமாகக் கொண்டு விருப்பத்துடன் வழிபடாத

வர்களுடைய தெளிவினை ஒரு தெளிவாகக் கொள்ளோம். அதாவது வழிபடுபவருடைய தெளிவே உண்மையில் தெளிவாகும். மற்றையோருடையது அல்ல என்றபடி. தெளிவு— புண்ணியம், பாபம் இன்னது என்று ஆராய்ந்து உண்மையை அறிந்து தெளிந்த நிலை.

ஐயன் என்றால் பெருமையுடையவன், தலைவன் என்று பொருள்படும். அத்தகைய ஐயன்மார்க்கும் அளத்தற்கரிய பெருமையுடையவன் ஆதலின் அவர்க்கும் பெருந்தலைவன் நமது பிரானாகிய சிவபெருமான் என்க. அத்தகைய அவனது பெருமையினையே மகளிர் தமது பாடலில் இசைத்துப் பாடுவர் என்று அருளிச் செய்தவாறு.

10, தொடைகளில் அசைக்கும் நான்கு விரற்கடை அகலமுள்ள கோவணம் தரித்தலையும் நீக்கி முழுநிர்வாணமாகத் திரியும் அறங்காட்டும் சமணர்களும், சாக்கியர் எனப்படும் புத்தர்களும் பழிச்சொற்களால் தூற்றுந்திறத்தினைக் காட்டுவதைப் பொருட்படுத்திச் செவிசாய்க்காதீர்கள். நல்ல ஞானத் தெளிவுடைய மக்களே! புறங்காட்டில் ஆடல்புரிவானாகிய சிவபிரானின் பூம்புகார்ச் சாய்க்காட்டைச் சென்றடைந்து அங்குப் பெருமானைச் சரண்புகுங்கள் என்று வழிப்படுத்தியருளினார் என்க. அம்மாதிரி வழிபடுபவர்களே தெளிவுடையவர்கள் ஆவார்கள்,

'அறங்காட்டும் அமணர்' என்பது உண்மையில் அவர்களிடம் அறம் (தருமநெறி) இல்லாது, அது இருப்பதுபோலத் தமது சாதுர்யமான பேச்சாலும் போலி ஒழுக்கங்களாலும் வெளிக்குக் காட்டுதலாம்.

11. பந்து அடித்தாலும் நொந்து தளரும் சிலம்பணிந்த மென்மையான பாதங்களையுடைய மகளிரது பந்தும், காலில் தரித்த கழல் என்னும் அணியும் ஒலி செய்யும் சீகாழியைச் சேர்ந்த திருஞானசம்பந்தன் தமிழிற்பாடிய திருச்சாய்க்

னாட்டுப் பாடல்கள் பத்தினையும் எம்முடைய உறுதியான பற்றுக்கோடு என்று திடமான கருத்துடன் ஏத்துபவர்களுக்கு எல்லாத்துன்பங்களும் இல்லையாகக் கெடும் என்றவாறு.

ஏத்துதல் என்றது அப்பாடல்களைக் கொண்டு இறைவனைத் துதிப்பது ஆகும். தமது இடர்கள் கெடவேண்டும் என எண்ணுபவர்கள் செய்ய வேண்டுவது யாது என்பதை இப்பதிகத்தினில் ஆசாரியர் அருளிச் செய்திருக்கின்றார்.

சிவம்

---



---

உ

சிவமயம்

# திருச்சாய்க்காடு—2

திருச்சிற்றம்பலம்

பண்-இந்தளம்] [2-ம்திருமுறை

நித்த லுந்நிய மஞ்செய்து நீர்மலர் தூவிச்
சித்த மொன்றவல் லார்க்கரு ளுஞ்சிவன் கோயில்
மத்த யானையின் கோடும்வண் பீலியும் வாரித்
தத்துநீர்ப் பொன்னி சாகர மேவுசாய்க் காடே. 1

பண்ட லைக்கொண்டு பூதங்கள் பாட நின்றுடும்
வெண்ட லைக்கருங் காடுறை வேதியன் கோயில்
கொண்ட லைத்திகழ் பேரிமு ழங்கக் குலாவித்
தண்ட லைத்தட மாமயி லாடுசாய்க் காடே. 2

நாறு கூவிள நாகிள வெண்மதி யத்தோடு
ஆறு சூடும் அமரர் பிரானுறை கோயில்
ஊறு தேங்கனி மாங்கனி யோங்கிய சோலைத்
தாறு தண்கத லிப்புதல் மேவுசாய்க் காடே. 3

வரங்கள் வண்புகழ் மன்னிய எந்தை மருவார்
புரங்கள் மூன்றும் பொடிபட எய்தவன் கோயில்
இரங்க லோசையு மீட்டிய சரக்கொடு மீண்டித்
தரங்க நீள்கழித் தண்கரை வைகுசாய்க் காடே. 4

ஏழை மார்கடை தோறு மிடுபலிக் கென்று
கூழை வாளர வாட்டும் பிரானுறை கோயில்
மாழை யொண்கண் வளைக்கை நுளைச்சியர் வண்பூந்
தாழை வெண்மடற் கொய்துகொண் டாடுசாய்க்
காடே. 5

துங்க வானவர் சூழ்கடல் தாம்கடை போதில்
அங்கொர் நீழ லளித்தஎம் மானுறை கோயில்
வங்கம் அங்கொளிர் இப்பியு முத்து,மணியுஞ்
சங்கும் வாரித் தடங்கட லுந்துசாய்க் காடே. 6

வேத நாவினர் வெண்பளிங் கின்குழைக் காதர்
ஓத நஞ்சணி கண்ட ருகந்துறை கோயில்
மாதர் வண்டுதன் காதல்வண் டாடிய புன்னைத்
தாது கண்டு பொழில்மறைந் தூடுசாய்க் காடே. 7

இருக்கு நீள்வரை பற்றி யடர்த்தன் றெடுத்த
அரக்கன் ஆகம் நெரித்தருள் செய்தவன் கோயில்
மருக் குலாவிய மல்லிகை சண்பகம் வண்பூந்
தருக் குலாவிய தண்பொழில் நீடுசாய்க் காடே. 8

மாலி னோடயன் காண்டற் கரியவர் வாய்ந்த
வேலை யார்விட முண்டவர் மேவிய கோயில்
சேலி னேர்விழி யார்மயி லாலச் செருந்தி
காலை யேகன கம்மலர் கின்றசாய்க் காடே. 9

ஊத்தை வாய்ச்சமண் கையர்கள் சாக்கியர்க்
கென்றும்
ஆத்த மாக அறிவரி தாயவன் கோயில்
வாய்த்த மாளிகை சூழ்தரு வண்புகார் மாடே
பூத்த வாவிகள் சூழ்ந்து பொலிந்தசாய்க் காடே. 10

ஏனை யோர்புகழ்ந் தேத்திய எந்தைசாய்க் காட்டை
ஞான சம்பந்தன் காழியர் கோன்நவில் பத்தும்
ஊன மின்றி யுரைசெய வல்லவர் தாம்போய்
வான நாடினி தாள்வர்இம் மாநிலத் தோரே. 11

திருச்சிற்றம்பலம்

**பதிகவரலாறு:**

திருச்சாய்க்காட்டில் இறைவனை 'மண்புகார்' எனத் தொடங்கும் திருப்பதிகத்தினால் துதித்துப் போற்றிய பின்னரும் உலகினில் விளங்கிய திருத்தொண்டர்கள் போற்ற அங்கு எழுந்தருளியிருந்த திருஞானசம்பந்தப்பிள்ளையார், மேலும் அழகுடைய இசையினைப் பொருந்திய **'நித்தலும் நியமஞ்செய்து'** எனத் தொடங்கும் திருப்பதிகத்தினைப் பாடித் துதித்து இறைவரது திருவெண்காட்டினை மிக்க விருப்பத்துடன் பணிதற்குச் சென்றனர். இச்செய்தியினைப் பின்வரும் பெரியபுராணப்பாடலும் கூறுதல் காண்க:

**சீரினில் திகழ்ந்த பாடல் திருக்கடைக்**
**காப்புப் போற்றி**
**பாரினில் பொலிந்த தொண்டர் போற்றிடப்**
**பயில்வார் பின்னும்**
**ஏரிசைப் பதிகம் பாடி ஏத்திப்போந்து**
**இறைவர் வெண்காடு**
**ஆருமெய்க் காத லோடும் பணிவதற்கு**
**அணைந்தா ரன்றே.**

பெரியபுராணப் பாடல் இவ்வளவு தெளிவாக, இப்பதிகத்தினைப்பாடித் துதித்த பின்னரே திருவெண்காட்டினை அணைந்தனர் எனக்கூறியிருந்தும் "திருவெண்காட்டினை அடைந்து வழிபட்டு மீண்டும் போந்து இத்திருப்பதிகம் பாடியருளியது போலும்" எனவொரு உரைப் பதிப்பில் பதிகவரலாறு கூறப்பட்டிருப்பதன் காரணம் புலப்பட்டிலது.

**பதிகப்பொழிப்புரை:**

1. நாள்தோறும் நியமமாகச் செய்யுங் கடன்களைச் செய்து, பூவும் நீருங்கொண்டு இறைவனைப் பூசித்துப் பின்னர் மன ஒருமையுடன் அவரைத் தியானிக்க வல்லவர்களுக்கு அருள்புரிகின்ற சிவபெருமானார் எழுந்தருளியிருக்குங் கோயில், மதத்தினால் மயக்கங் கொண்ட யானைகளின் தந்தங்களையும், மயிற்பீலிகளையும் வாரிக் கொண்டு தத்தி

வருகின்ற காவிரிநதி கடலில் சேருகின்ற இடமாகிய திருச் சாய்க்காடு ஆகும்.

**'நியமஞ்செய்தல்'** என்பது தினந்தோறும் நியதியாகச் செய்யப்படவேண்டிய நித்திய கர்மானுஷ்டானங்களைச் செய் தலாகும். அவை ஸ்நானம், சந்தியாவந்தினம், ஜபம் போன்றவைகளாம். இவைகளைச் செய்தபின்னரே சிவபூஜை செய்தல் வேண்டும் என்பதும் இங்குப் பெறப்படுகிறது.

**'நீர்மலர் தூவுதல்'** என்பது நீரினால் இறைவனுக்கு திரு முழுக்காட்டி (அபிஷேகம் செய்து) மலரினால் அருச்சித்த லாகும். உபலக்ஷணத்தினால் மற்றைய தூபம், தீபம், நைவேத்தியம் போன்ற உபசாரங்களையும் கொள்க.

**'தத்துநீர்ப் பொன்னி சாகரம் மேவும்'** என்பதற்குக் காவிரி நீர் நாட்டுவளத்திற்கே பெரிதும் பயன்பட்டுக் கடலிற்சேர் வது மிகச்சிறிய அளவே ஆதலின் **'பாயும்'** என்னாது **'மேவும்** என்றருளிச் செய்தார் என விசேடஉரை காண்பாரும் உண்டு.

**2.** பண்களின் இசைகளை மேற்கொண்டு பூதகணங்கள் ஆடத் தானும் ஆடுகின்றவனும், வெண்மையான தலைகள் நிறைந்த கரிய காட்டிலே உறைகின்ற வேதியனுமாகிய சிவபெருமானது கோயில், மேகத்தின் ஒலியை நிகர்த்து ஒலிக்கும் பேரிகை முழங்க அதனுடன் பொருந்தி பெரிய மயில்கள் ஆடுகின்ற குளிர்ந்த சோலைகளையுடைய திருச் சாய்க்காடு ஆகும்.

3. மணம் வீசுகின்ற வில்வம், மிக்க இளமையான பிறைச்சந்திரன் இவைகளோடு கங்கையாற்றினையும் தலையி லணிந்த தேவர்கள் தலைவனாகிய சிவபெருமான் எழுந்தருளி யிருக்கின்ற கோயில், சுவையூறுகின்ற இனிய கனிகள், மாங் கனிகள் நிறைந்து ஓங்கிய சோலைகளும், குலைகள் கூடிய வாழைப்புதர்களும் பொருந்திய திருச்சாய்க்காடு ஆகும். அதாவது இனிய பழங்களைத் தரும் மரங்களும், மாமரங் களும், வாழைமரங்களும் நிறைந்து இயற்கைவளம் மிக்க

சாய்க்காடு என்பது பொருள். 'தேங்கனி' என்பதற்கு தெங்கின் கனி அதாவது முதிர்ந்த தேங்காய் என்று கொண்டால் தென்னைமரங்களும் நிறைந்துள்ளன என்பதாம்.

4. வேண்டுவார்வேண்டியபடி வரங்களையருளும் வள்ளல் தன்மையால் அடைந்த புகழ் என்றும் நீங்காது நிலைத்து நிற்கும் எமது தந்தையாகிய சிவபெருமான், பகைவரது முப்புரங்களையும் பொடியாகுமாறு எரித்தவன். அத்தகைய பிரான் எழுந்தருளியிருக்கும் தலம், வாணிபம் செய்து சேர்த்த பொருள்களுடன் வணிகர்கள் வந்து சேர்தலால் பெருத்த ஆரவாரமும் ஓசையும் மேவுகின்ற அலைகள் நிறைந்த கடற் கரையினையுடைய திருச்சாய்க்காடு ஆகும். அதாவது, ஈட்டிய சரக்குகளோடு வணிகர்கள் வந்து சேரும் ஆரவாரமும், அலைகளின் ஓசையும் சேர்ந்து பேரிரைச்சலை விளைவிக்கும் கடற்கரையினையுடைய திருச்சாய்க்காடு எனக் கூறியதாம்.

5. மகளிருடைய (தாருகாவனத்து இருடியர்களின் மனைவியர்) வீட்டு வாயில்கள் தோறும் இடுகின்ற பிச்சைக்கென்று கூழையாகிய ஒளிமிக்க பாம்பினை ஆட்டுகின்ற இறைவன் உறைகின்ற கோயில், பொன்போல் ஒளிரும் கண்களையும், வளையல்களணிந்த கைகளையுமுடைய நுளைச்சியர் வளப்பம் மிக்க பூக்களையுடைய தாழையின் மடல்களைக் கொய்து கொண்டு விளையாடுகின்ற திருச்சாய்க்காடு ஆகும்.

கடலும் கடல்சார்ந்த இடமுமான நெய்தல் நிலத்து மகளிர் நுளைச்சியர் எனவும், ஆண்கள் நுளையர் எனவும், இவர்களது இருப்பிடம் நுளைப்பாடி எனவும் வழங்கப்படும் இவர்கள் மீன்பிடித்தல் தொழிலில் ஈடுபட்டுள்ள பரதவர் என்னும் குலத்தைச் சார்ந்தவராவர். கடல் சார்ந்த இடமான மணற்பிரதேசத்தில் தாழை விசேடமாக வளருமாகையால் பரதகுலப் பெண்கள் தாழைமடல்களைக் கொய்து விளையாடும் திருச்சாய்க்காடு என அந்நிலத்தின் இயைபுக்கேற்ற வண்ணம் அருளிச் செயதார் என்க.

கூழைவாளரவு என்பதில் கூழை என்பது ஒரு வகைப் பாம்பினைக் குறிக்கும். மேலும் கூழைமை என்பது கடை குறையும் தன்மை. பாம்பினைத் தலைமுதல் நோக்கின் தலையி னின்றும் உடல்பாகம் சிறிது சிறிதாகச் சிறுத்துக் கொண்டே போகும் தன்மை புலப்படும்.

6. உயர்வு பொருந்திய தேவர்கள் பாற்கடலைக் கடைந்த பொழுது உண்டாகிய நஞ்சின் வெம்மை தணிவதற்கு அரு ளாகிய நிழலையளித்த எமது பெருமான் உறைகின்ற கோயில், அகன்ற கடலானது மரக்கலங்களையும், அங்கு ஒளிர்கின்ற முத்துச்சிப்பிகளையும், முத்தினையும், மணியினையும், சங்குகளை யும் வாரி உந்துகின்ற திருச்சாய்க்காடாகும்.

7. வேதத்தினை முதன்முதலாகச் சொல்லியருளிய திரு நாவினையுடையவரும், வெண்மையான பளிங்கினால் ஆன குழையணிந்த திருச்செவியினையுடையவரும், கடலினின்றும் எழுந்த விஷத்தினை அணிந்த கழுத்தினையுடைய திருநீல கண்டருமான பெருமான் விரும்பிக் கோயில் கொண்டுள்ள இடம், அழகிய பெண்வண்டானது தன்னுடைய அன்பு மிக்க ஆண்வண்டானது புன்னைமலர்களில் புகுந்து ஆடிய போது மேலே பூசிக்கொண்ட பூந்தாதுக்களைக் கண்டு கோபித்துச் சோலையில் மறைந்து ஊடலைச் செய்கின்ற திருச் சாய்க்காடு ஆகும்.

ஊடல் என்பது கணவன்-மனைவியரிடை நிகழும் பிணக்கு. வேறு பெண்வண்டோடு தன்காதல் வண்டு ஆடியதோ என ஐயுற்றுப் பெண்வண்டு கோபித்துத் தன்னை பார்க்க முடியாதபடி சோலையினுள் புகுந்து மறைந்து ஊடியது என்க.

8. இறைவனார் வீற்றிருக்கின்ற உயர்ந்த திருக்கயிலை மலையினைப் பெயர்த்தெடுக்க முயன்ற அரக்கனாகிய இராவண னது உடம்பு நெரியச் செய்து, அவன் தனது பிழையினை உணர்ந்து பின்னர் துதித்து வேண்டியபொழுது அவனுக்கே பேரருள் புரிந்த சிவபிரானாரது திருக்கோயில், மணம் பொருந்

திய மல்லிகை, சண்பகம் மற்றும் வளமையுடைய பூமரங் களும் நிறைந்த குளிர்ந்த சோலைகள் ஓங்கிப் பரந்து நிற்கும் திருச்சாய்க்காடு ஆகும்.

9. திருமாலும் நான்முகனும் காணுதற்கரியவரும் கடலில் எழுந்த விஷத்தினையுண்டவருமான பெரியோன் விரும்பி அமர்ந்த கோயில், சேலினையொத்த விழிகளை யுடைய மாதர்களும், மயில்களும் ஆரவாரித்து ஆடக் காலை வேளைகளில் செருந்தியானது பொன்போன்ற தனது மலர் களைப் பூக்கும் திருச்சாய்க்காடு ஆகும். அதாவது சோலை களில் மாதரும் மயிலும் ஆடுவர். செருந்தி பொன்னிறமான பூக்களைப் பூக்கும் என்பதாம்.

10. பற்களைத் துலக்காது ஊத்தை நிரம்பிய வாயினை யுடைய சமணர்களாகிய கீழ்மக்களுக்கும், சாக்கியர்கள் எனப்படும் பௌத்தர்களுக்கும் எக்காலத்தும் அறிவதற்கு அரிய உண்மைப் பொருளாய் விளங்குகின்ற பரமனது திருக் கோயில் மாளிகைகள் சூழ்ந்து விளங்கும் புகார் நகருக்கருகே மலர்கள் பூத்த குளங்கள் சூழ்ந்து பொலிவுடன் திகழும் திருச்சாய்க்காடு ஆகும். புகார் என்ற காவிரிப்பூப்பட்டி னத்துக்கு அருகே உள்ளது திருச்சாய்க்காடு என்று குறிப் பிட்டமை காண்க.

ஊத்தை என்பது பற்களில் சேரும் அழுக்கு. அதனைப் போக்கப் பற்களைச் சுத்தம் செய்தால் அதில் உள்ள சிறு கிருமிகள் இறந்துபோம் என்ற காரணத்தினால் சமணர்கள் பற்களைத் துலக்காது எப்பொழுதும் ஊத்தைவாயர்களாகவே இருப்பர். ஆதலால் அவர்களை ஊத்தைவாய்ச் சமண் கையர்கள் எனக்குறிப்பிட்டார்.

சாகமரம் என்பது தேக்கமரம் என்று பொருள்படும். தேக்கமரம் நிறைந்திருந்த காரணத்தினால் கௌதமபுத்தர் பிறந்த நாட்டுக்குச் சாக்கியநாடு என்றும் அவருக்குச் சாக்கியமுனி என்றும் பெயர்கள் வழங்கலாயிற்று. அவரைப் பின்பற்றும் பௌத்தர்கள் சாக்கியர் எனப்பட்டனர்.

11. உபமன்னிய முனிவர், இயற்பகை நாயனார், இந்திரனது தாயார், ஆதிசேடன் ஆகிய ஏனையோர் போற்றிப் புகழ்ந்து பூசித்த எந்தைபெருமானாகிய சிவபிரான் கோயில்கொண்ட திருச்சாய்க்காட்டினை, சீகாழிப்பதியில் உள்ளோரின் தலைவனாகிய திருஞானசம்பந்தன் பாடிய பத்துப் பாடல்களையும் குற்றமொன்றும் இல்லாது சொல்லவல்லவர்களாகிய இம் மாநிலத்துள்ளவரே வானநாட்டினை இனிதாக ஆள்வர்.

சொல்லவல்லவராகிய இம்மாநிலத்துள்ளோரரே என்றபடியால், சொல்லவல்லாத இம்மாநிலத்துள்ள மற்றையவர்கள் வான நாடாள்வதற்கு உரிமையுள்ளவர் அல்லர் என்பது பெறப்பட்டது. ஊனமின்றிச் சொல்லுதலாவது, உடலும் உள்ளமும் தூய்மையுடனிருக்கச் சொல்லுதல், அன்புடனும், நம்பிக்கையுடனுஞ் சொல்லுதல், எழுத்துப் பிழையின்றிச் சொல்லுதல் போல்வனவாம்.

—சிவம்—

---

## திருஞானசம்பந்தர் திருவடியே புகலிடம்

**பூவான் மலிமணிநீர்ப் பொய்கைக் கரையினியல்**
**பாவான் மொழிஞானப் பாலுண்டு—நாவான்**
**மறித்தெம் செவியமுதாய் வார்த்தபிரான் தண்டை**
**வெறித்தண் கமலமே வீடு.**

சிவப்பிரகாச சுவாமிகள் அருளிய
நால்வர் நான்மணிமாலை.

தாமரை மலர்களோடு முத்துக்களும் செறிந்த நீர்மிக்க சீகாழிப் பிரமதீர்த்தக் கரையிலே, இயற்பாவால் துதிக்கப் படும் ஞானப்பாலை இனிதாக அருந்தி அதனை நாவினால் தடுத்து எங்களுடைய செவிக்கு அமுதமான பாக்களாய் வார்த்த திருஞானசம்பந்தப்பிரானாரின் தண்டையணிந்த, நறுமணமும் குளிர்ச்சியும் வாய்ந்த செந்தாமரை மலர் போன்ற திருவடிகளே எமக்குச் சரணமடையும் இடமாம். அதாவது வீடுபேறடைவதற்குச் சாதனமாகும் என்பது கருத்து,

உ

சிவமயம்

# திருவெண்காடு—1

பண்-காந்தாரம்] [2-ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

உண்டாய் நஞ்சை உமையோர் பங்கா என்றுள்கித்
தொண்டாய்த் திரியும் அடியார் தங்கள் துயரங்கள்
அண்டா வண்ணம் அறுப்பான் எந்தை ஊர்போலும்
வெண்டா மரைமேற் கருவண் டியாழ்செய் வெண்
காடே. 1

நாதன் நம்மை ஆள்வா னென்று நவின்றேத்திப்
பாதம் பன்னாள் பணியும் அடியார் தங்கள்மேல்
ஏதந் தீர இருந்தான் வாழும் ஊர்போலும்
வேதத் தொலியாற் கிளிசொற் பயிலும் வெண்காடே.

தண்முத் தரும்பத் தடமூன் றுடையான் றனையுன்னிக்
கண்முத் தரும்பக் கழற்சே வடிகை தொழுவார்கள்
உண்முத் தரும்ப உவகை தருவான் ஊர்போலும்
வெண்முத் தருவிப் புனல்வந் தலைக்கும் வெண்காடே.

நரையார் வந்து நாளுங் குறுகி நணுகாமுன்
உரையால் வேறா வுள்கு வார்கள் உள்ளத்தே
கரையா வண்ணங் கண்டான் மேவும் ஊர்போலும்
விரையார் கமலத் தன்னம் மருவும் வெண்காடே 4

பிள்ளைப் பிறையும் புனலுஞ் சூடும் பெம்மானென்று
உள்ளத் துள்ளித் தொழுவார் தங்கள் உறுநோய்கள்
தள்ளிப் போக அருளுந் தலைவன் ஊர்போலும்
வெள்ளைச் சுரிசங் குலவித் திரியும் வெண்காடே. 5

ஒளிகொள் மேனி யுடையாய் உம்ப ராளீயென்று
அளிய ராகி யழுதுற் றூறும் அடியார்கட்கு
எளியான் அமரர்க் கரியான் வாழும் ஊர்போலும்
வெளிய உருவத் தானை வணங்கும் வெண்காடே. 6

கோள்வித் தனைய கூற்றந் தன்னைக் குறிப்பினால்
மாள்வித் தவனை மகிழ்ந்தங் கேத்த மாணிக்காய்
ஆள்வித் தமரர் உலகம் அளிப்பான் ஊர்போலும்
வேள்விப் புகையால் வானம் இருள்கூர் வெண்காடே

வளையார் முன்கை மலையாள் வெருவ வரையூன்றி
முளையார் மதியஞ் சூடி யென்று முப்போதும்
இளையா தேத்த இருந்தான் எந்தை ஊர்போலும்
விளையார் கழனிப் பழனஞ் சூழ்ந்த வெண்காடே. 8

கரியா னோடு கமல மலரான் காணாமை
எரியாய் நிமிர்ந்த எங்கள் பெருமான் என்பார்கட்கு
உரியான் அமரர்க் கரியான் வாழும் ஊர்போலும்
விரியார் பொழிலின் வண்டு பாடும் வெண்காடே. 9

பாடும் அடியார் பலருங் கூடிப் பரிந்தேத்த
ஆடும் அரவம் அசைத்த பெருமான் அறிவின்றி
மூடம் உடைய சமண்சாக் கியர்கள் உணராத
வேடம் உடைய பெருமான் பதியாம் வெண்காடே.

விடையார் கொடியான் மேவி உறையும்
வெண்காட்டைக்
கடையார் மாடங் கலந்து தோன்றும் காழியான்
நடையா ரின்சொல் ஞானசம் பந்தன்
தமிழ்வல்லார்க்கு
அடையா வினைகள் அமர லோகம் ஆள்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

பதிகவரலாறு : திருச்சாய்க்காடு தலத்தினைத் தொழுது வணங்கிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் மிகுந்தகாதலோடு திருவெண்காட்டினைப் பணிவதற்கு அணைந்தனர். திருவெண்காட்டுத் தொண்டர்கள் இன்னதன்மையர் ஆயினர் என்று சொல்லமுடியாதபடி பெருமகிழ்ச்சி கொண்டு அவரை எதிர் கொண்டழைத்துப் பணிந்து போற்ற அப்பதியினுட் புகுந்தனர். முத்தமிழ் விரகராகிய பிள்ளையாரும் இறைவரது திருக்கோபுரத்தின் முன்பு மனத்திற்பெருகிய மகிழ்ச்சியுடன் சென்று தாழ்ந்து வணங்கி உள்ளே புகுந்து பக்தர்களாகிய அடியவர்கள் புடைசூழ திருக்கோயிலைச் சூழ்ந்து வலம்வந்து பெருமானரது திருமுன்பு சேர்ந்து தொழுது வணங்கினர். மெய்ப்பொருளாகிய பரமனுரைக் 'கண்காட்டு நுதலானும்' எனத்தொடங்கும் சொல்லுதற்கரிய பதிகமாலையால் அங்குள்ள சோம, சூரிய, அக்கினி ஆகிய மூன்று குளங்களையும் அமைத்துப்பாடித் துதித்தனர். பின்னரும் பிள்ளையார், 'உண்டாய் நஞ்சை' எனவும் 'மந்திரமறையவை' எனவும் தொடங்கும் இரண்டு திருப்பதிகங்களையும் பாடியருளினர். 'செப்பரும் பதிகமாலை' என்ற பெரிய புராணச் சொற்றொடர் பதிகங்களால் ஆனமாலை என்று பொருள்பட நிற்றலால 'கண்காட்டு நுதலானும்' என்ற திருப்பதிகம் பாடித்துதித்த பின்னர் இவ்விரண்டு பதிகங்களையும் பாடி ஒரு மாலையாகச் சூட்டினர் என்பது புலனுகும். இப்பதிகமாலையாகிய மூன்று பதிகங்களில் 'கண்காட்டு நுதலானும்' என்ற முதல் திருப்பதிகம் நமது முதலாவது தமிழ்மாலையில் கொடுக்கப்பட்டுள்ளதால் எஞ்சிய இரு திருப்பதிகங்கள் மட்டுமே இவ்விரண்டாவது தமிழ் மாலையில் கொடுக்கப்பட்டுள்ளன.

பதிகப்பொழிப்புரை :

1. வெண்தாமரை மீது கரியவண்டுகள் ஒலி செய்யும் திருவெண்காடு, தேவர்களைகாக்கும் பொருட்டு விஷத்தினை உண்ட பெரியோனே ! உமாதேவியைப் பாகத்தில் கொண்ட அம்மையப்பனே! என்று உள்ளத்தில் தியானித்துத் தொண்டர்களாய் வாழும் அடியார்களது துயரங்கள்

அவர்களை அண்டாத வண்ணம் தீர்த்தருள்புரிபவனுகிய எமது தந்தையாகிய சிவபெருமானது ஊர் போலும்.

2. கிளிகளெல்லாம் வேதத்தின் ஒலியினுல் சொற்களைப் பயிலுகின்ற திருவெண்காடு, நம்முடைய பெருமான் நம்மை ஆட்கொண்டு காத்திடுவான் என்று திடமான உறுதியுடன் வாயாரப்பாடிப் பலகாலமும் இறைவனது திருப்பாதங்களைத் தவருது வணங்கிடும் அடியவர்களிடத்தில் துன்பங்கள் வந்து சாராத வண்ணம் காப்பதற்காகவே இருப்பவனுகிய சிவபெருமான் கோயில்கொண்ட ஊர் போலும்.

தனது அடியார்கள்மீது துன்பங்கள் சாராவகை தடுத்துக் காக்கும் பெருமான் கோயில்கொண்டுள்ள ஊர் திருவெண் காடு என்பது கருத்து. கிளிகள் தாம் வாழுமிடத்தில் உள்ள வர்களைப்போலவே சொற்களைப் பயிலும். இங்கு வேதத் தொலியால் அவைகள் சொற்களைப் பயிலும் என்றமையால் திருவெண்காட்டில் அந்தணர்கள் நாளும் தவருது வேத மோதி வந்தனர் என்பதை உணர்த்தியவாறு காண்க. இவ்வாறே திருவீழிமிழலையில் பாடிய பதிகத்திலும் 'பாரிசையும் பண்டிதர்கள் பன்னுளும் பயின்ருேதும் ஓசைகேட்டு வேரிமலி பொழிற்கிள்ளை வேதங்கள் பொருட் சொல்லும் மிழலை' என அருளிச் செய்துள்ளனர்.

3. கடல்நீர் வெண்மையான முத்துக்களை வாரி அலை வீசும் திருவெண்காடு, குளிர்ந்த முத்துக்கள் அரும்புபோலத் தோன்ற மூன்று குளங்களை உடையவனுகிய பெருமானைத் தியானித்து ஆனந்தபாஷ்பம் கண்களினின்றும் முத்துக்களைப் போலச் சொரிய வீரக்கழலணிந்த இறைவனது திருவடி களைத் தொழுவார்களது உள்ளம் மகிழப் பேரின்பத்தினைத் தரும் பெருமானது ஊர் போலும்.

வெண் முத்தருவிப் புனல் என்றும் பாடமுண்டு. அதற்கு வெள்ளிய முத்தினை ஒத்த அருவிநீர் என்பது பொருளாகும்.

4. மணம் பொருந்திய தாமரைமலரில் அன்னப்பறவை பொருந்திவாழும் திருவெண்காடு, தலைமயிர் நரைத்து வாழ்

நாள் சுருங்கும் முன்னரே வாயுரையால் வேறுபடாதபடி தியானிப்பவர்களது உள்ளத்திலே என்றும் கரைந்து மறையாத வண்ணம் நிலைத்து நிற்கும் பெருமானது ஊர் போலும்.

உயிர்போகும் முன் இறைவனை மனதில் நினைத்தும், வாயினால் பாடியும் வழிபடுவாரது உள்ளத்திரையில் அவனது உருவம் என்றும் மறையாது நிலைபெற்று நிற்கும் என அருளிச் செய்தவாறு.

இனிக் **'கரையாவண்ணம்'** என்பதற்கு அடியவர்கள் மனம் வருந்தி நையாவண்ணம் இறைவன் அவரது உள்ளத்திலே நிலைபெற்றிருப்பான் என்றும் கொள்ளலாம்.

5. வெண்ணிறமுடைய சுரிந்த சங்குகள் உலாவித் திரிகின்ற திருவெண்காடே, இளம்பிறையும் கங்கையும் சூடுகின்ற பெருமான் என்று உள்ளத்திலே நினைந்து வழிபடுகின்ற அடியார்களுக்கு உண்டாகின்ற நோய்களை ஒழிந்துபோம் படியாக அருள்செய்யும் தலைவனாகிய சிவபிரானது ஊர் போலும்.

6. வெண்ணிறமுடைய இந்திரனுடைய ஐராவதம் என்னும் யானை வழிபட்டு அருள்பெற்ற திருவெண்காடு, ஒளிமயமான திருமேனியுடையவரே! தேவர்களை ஆள்பவரே! என்று அன்புமுதிர்ச்சியால் கனிந்து, உள்ளமுருகி அழுதும் அரற்றியும் கண்ணீர் சொரிந்தும் அருள்வெள்ளத்தில் ஊறித் திளைத்த அடியவர்களுக்கு உரியவனாய்த் தேவர்கட்கு அரியவனாகிய சிவபிரான் வாழுகின்ற திருத்தலம் போலும்.

வெள்ளானைக்கு அருள்புரிந்ததை முன்னரும் கண்காட்டு நுதலானும் எனத் தொடங்கும் பதிகத்துள்ளும் கூறியுள்ளார்.

வெள்ளையானை வழிபட்ட வரலாறு கந்தபுராணத்துள் கூறப்படுகிறது. சூரபத்மனின் குமாரன் பானுகோபன் தேவருலகத்தின் மீது படையெடுத்து இந்திரனின் குமாரனாகிய ஜயந்தனுடன் போர் செய்யும் போது ஜயந்தன் அடிபட்டு மூர்ச்சை

யடைந்தான். வெள்ளையானையாகிய ஐராவதமும் கூர்மை யான பாணத்தினுல் அடிக்கப்பட்டது. அப்பொழுது ஐரா வதம் மிக்கபலத்துடன் பானுகோபனுடைய ரதத்தினைத் தனது கொம்புகளால் வேகமாக இடித்துத்தேரோட்டியையும் கொன்று பானுகோபனையும் அவனது கருங்கல் போன்ற மார் பில் முட்டியது. அதனுல் அதனுடைய தந்தங்கள் முறிந் தன. பானுகோபன் அதனைக் கன்னத்தில் அடிக்க அது மூர்ச்சையாகி வீழ்ந்தது. பின்னர் மூர்ச்சை தெளிந்ததும் ச்வேதவனம் என்ற திருவெண்காட்டுக்குச் சென்று அங்குப் பெருமானைப் பூசித்துத் தனது தந்தங்களை மீண்டும் வளரப் பெற்றது. ஜயந்தனை பானுகோபன் சிறையில் அடைத்து விட்டபடியால், ஐராவதம் மேருமலையில் வசித்து வந்த இந்தி ரனைச் சென்றடைந்தது.

7. அந்தணர்கள் செய்யும் யாகத்தினின்றும் எழுகின்ற புகையினுல் இருள் மிகுகின்ற திருவெண்காடே, மரணத் துக்கு வித்துப்போன்ற அதாவது காரணமான கூற்றுவனை சிவபக்தி என்னும் ஒரே குறிப்பினுல் (இலக்கினுல்) மாள் வித்து அச்சிவபிரானை மகிழ்ச்சியுடன் வழிபட்ட சுவேதகேது என்னும் பிரமசாரிக்கு தேவவுலகத்தையும் ஆளச்செய் தருளினவனுகிய சிவபிரானது ஊர் போலும்.

மார்க்கண்டேயருக்காக இயமனை உதைத்தருளியது போலவே இத்தலத்தில் சுவேதகேது என்னும் பிராம்மணச் சிறுவருக்காக இயமனைக் கொன்ருர் என்று தலபுராணங் கூறு கிறது. இவ்வரலாறு லிங்கபுராணத்துள்ளும் பின்வருமாறு காணப்படுகிறது.

சுவேதன் என்னும் மறைமுனி தன் வாழ்நாள் மிகவும் குறைந்த காலம்தான் என்றறிந்து ஈசனைக் குறித்துத் தியானம் செய்வதில் தன் பொழுதையெல்லாம் கழித்தான். அவன் ஆயுட்காலம் முடியும் தறுவாயில் அவனுடைய உயிரைக் கவர்ந்து செல்ல காலனே வந்து, சுவேதனைக் கண்டு எள்ளி நகையாடி, யாரைத்தொழுது என்ன பயன், அவன் காலம்

முடிந்து விட்டது என்று சுவேதனிடம் கூறினன். சுவேதனே காலனை ஒரு பொருட்டாகவே மதிக்கவில்லை. மேலும் ஈசனை வழிபடுவதிலேயே மிகவும் தீவிரமாக முனைந்திருந்தான். மிகவும் சினந்த காலனும் தன்னுடைய பாசக்கயிற்றை சுவேதன் மீது வீசி அவனைக் கட்டி இழுத்தான். சுவேதன்தான் வழிபடும் லிங்கத்தைத் தழுவிக் கொள்ளக் காலனின் பாசக் கயிறு லிங்கத்தையும் இழுத்தது. மிகவும் சினந்த ஈசன் தன் லிங்கவடிவத்தினின்றும் தன் கணங்களுடன் வெளிப்பட்டுவர, அதைக் கண்ட மறுகணமே காலன் தன் நிலை குலைந்து கீழே விழுந்து உயிர் நீத்தான். இறைவன் தன்னிடம் காட்டிய அன்பினுல் மனம் பூரித்த சுவேதன் மீண்டும் ஈசனைத் தொழவும், ஈசன் சுவேதனைத் தன்கணங்களில் ஒருவனுகச் செய்து கொண்டும், காலனை எழுப்பித் தன்னிருப்பிடம் அடையவுஞ் செய்தார்.

8. விளைச்சல் பொருந்திய வயல்கள் சூழ்ந்த திருவெண்காடே, வளையலணிந்த முன்கையினை உடைய மலைமகள் நடுங்கும்படி மலையினை ஊன்றியவன் என்றும், இளம்பிறையினைச் சூடியவன் என்றும் காலை, பகல், மாலை ஆகிய மூன்று காலங்களிலும் சலிக்காது அடியவர்களால் தொழநின்றவனுகிய எந்தைபெருமானது ஊர் போலும்.

9. விரிந்த பொழிலினிடத்து வண்டுகள் பாடும் திருவெண்காடே, கரியநிறமுடைய திருமாலும் தாமரைமலரில் வாழும் பிரம்மதேவனும் காணுதவண்ணம் அழலுருவாய் நிமிர்ந்த எங்கள் பெருமான் என்று தொழுபவர்களுக்குத் திருவருள் பாலிக்கும் உரிமையுடையவனும் (அதாவது துதிக்கும் அடியவர்களே அவனது அருளுக்கு உரியவர் என்பது கருத்து) தேவர்கட்கு அரியவனுமான சிவபெருமான் வாழுகின்ற ஊர் போலும்.

10. தோத்திரங்களைப் பாடும் அடியவர் பலரும் கூடிப் பரிவுடன் வழிபட, ஆடுகின்ற பாம்பினை இடையிலே கட்டிய பெருமானும், அறிவில்லாது மூடத்தன்மையினையுடைய

சமணரும் சாக்கியரெனப்படும் பௌத்தரும் உணரமாட்டாத திருக்கோலமுடையவனுமான நமது சிவபெருமானுடைய ஊர் திருவெண்காடே போலும்.

11. விருஷபக் கொடியினையுடையவனுகிய சிவபிரான் விரும்பி எழுந்தருளியிருக்கும் திருவெண்காட்டினை, வாயில்கள் பொருந்திய மாடங்கள் கலந்து தோன்றும் சீகாழிப்பதியினைச் சேர்ந்தவனும் இனியநடை பொருந்திய சொற்களையுடையவனுமான திருஞானசம்பந்தன் தொழுதுபாடிய பதிகமாகிய தமிழ் வல்லார்க்குத் தீவினைகள் சென்று சேரா. மேலும் அவர்கள் அமரர் உலகையும் ஆள்வார்கள்.

—சிவம்—



---

ஞானசம்பந்தரே ! உயர்ந்தவர்யார் ?

இலைபடர்ந்த பொய்கை இடத்தழுதல் கண்டு
முலைசுரந்த அன்னையோ முன்னின்–நிலைவிளம்பக்
கொங்கை சுரந்தவருட் கோமகளோ சம்பந்தா
இங்குயர்ந்தாள் ஆர்சொல் எனக்கு.

—நால்வர் நான்மணிமாலை

தாமரை இலை படர்ந்த தடாகக் கரையிலே நீ அழுததைக் கண்டு திருமுலைப்பால் சுரந்த அன்னையாகிய அம்பிகையோ (அல்லது) முன்னே உமது நிலையினை (பெருமையினை) உரைக்கும்போதே (அதைக் கேட்டவளவிலே) திருமுலைசுரந்த அருள்மிகுதியுடைய மங்கயர்க்கரசியாரோ ? திருஞானசம்பந்த மூர்த்தியே! இவ்விருவரில் உயர்ந்தவர் யார்? அடியேனுக்கு உரைத்தருள்வீராக.

---

உ

சிவமயம்

# திருவெண்காடு—2

பண்–காந்தாரபஞ்சமம்] [3-ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

மந்திர மறையவை வான வரொடும்
இந்திரன் வழிபட நின்ற எம்மிறை
வெந்தவெண் ணீற்றர்வெண் காடு மேவிய
அந்தமு முதலுடை அடிக ளல்லரே. 1

படையுடை மழுவினர் பாய்புலித் தோலின்
உடைவிரி கோவணம் உகந்த கொள்கையர்
விடையுடைக் கொடியர்வெண் காடு மேவிய
சடையிடைப் புனல்வைத்த சதுர ரல்லரே. 2

பாலொடு நெய்தயிர் பலவு மாடுவர்
தோலொடு நூலிழை துதைந்த மார்பினர்
மேலவர் பரவுவெண் காடு மேவிய
ஆலம தமர்ந்தஎம் அடிக ளல்லரே. 3

ஞாழலுஞ் செருந்தியும் நறுமலர்ப் புன்னையுந்
தாழைவெண் குருகயல் தயங்கு கானலில்
வேழம துரித்தவெண் காடு மேவிய
யாழின திசையுடை இறைவ ரல்லரே. 4

பூதங்கள் பலவுடைப் புனிதர் புண்ணியர்
ஏதங்கள் பலவிடர் தீர்க்கும் எம்மிறை
வேதங்கள் முதல்வர்வெண் காடு மேவிய
பாதங்கள் தொழநின்ற பரமர் அல்லரே. 5

மண்ணவர் விண்ணவர் வணங்க வைகலும்
எண்ணிய தேவர்கள் இறைஞ்சும் எம்மிறை
விண்ணமர் பொழில்கொள்வெண் காடு மேவிய
அண்ணலை அடிதொழ அல்ல லில்லையே. 6

நயந்தவர்க் கருள்பல நல்கி இந்திரன்
கயந்திரம் வழிபட நின்ற கண்ணுதல்
வியந்தவர் பரவுவெண் காடு மேவிய
பயந்தரு மழுவுடைப் பரம ரல்லரே. 7

மலையுடன் எடுத்தவல் லரக்கன் நீள்முடி
தலையுடன் நெரித்தருள் செய்த சங்கரர்
விலையுடை நீற்றர்வெண் காடு மேவிய
அலையுடைப் புனல்வைத்த அடிக ளல்லரே. 8

ஏடவிழ் நறுமலர் அயனும் மாலுமாய்த்
தேடவுந் தெரிந்தவர் தேர கிற்கிலார்
வேடம துடையவெண் காடு மேவிய
ஆடலை அமர்ந்தஎம் அடிக ளல்லரே. 9

போதியர் பிண்டியர் பொருத்த மில்லிகள்
நீதிகள் சொல்லியும் நினைய கிற்கிலார்
வேதியர் பரவுவெண் காடு மேவிய
ஆதியை அடிதொழ அல்ல லில்லையே. 10

நல்லவர் புகலியுள் ஞான சம்பந்தன்
செல்வன்எம் சிவனுறை திருவெண்
காட்டின்மேல்
சொல்லிய அருந்தமிழ் பத்தும் வல்லவர்
அல்லலோ டருவினை அறுதல் ஆணையே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி : தேவி :
சுவேதாரணியேசுவரர்; பிரம்மவித்யா நாயகி.

**பதிகவரலாறு :**

முன்பதிக வரலாறு காண்க.

**பதிகப்பொழிப்புரை :**

1. மந்திரங்களைத் தன்னுள் கொண்டுள்ள வேதங்களும் தேவர்களோடு இந்திரனும் வழிபடும்படி எழுந்தருளிய எமது தலைவர், வெந்த வெண்ணீற்றினை அணிபவரும், திருவெண் காட்டில் விரும்பி இருப்பவரும் எல்லாப்பொருட்கும் அந்த மும் முதலுமாய் இருப்பவருமான பரமசிவனாரன்றோ ?

சிவபெருமானே எல்லாப்பொருட்கும் இறுதியைச் செய்ப வரும் மீண்டும் அவற்றைத் தோற்றுவிப்பவருமாவார் என் பதை அந்தமும் முதலும் என்ற சொற்றொடரால் குறிப்பிட்டார். அந்தமுமாதியுமாகினாய் என்ற சுந்தரர் திருவாக்கும் அந்தமு மாதியுமாகி நின்றீர் என்ற திருநாவுக்கரசரின் திருவாக்கும் காண்க. அந்தம் ஆதி என்மனார் புலவர் என்று சிவஞான போதம் கூறுகிறது.

2. படையாக மழுவினையுடையவர். தோலினால் ஆன கோவண ஆடையை மகிழ்ந்து ஏற்கும் கொள்கையினர். விருஷபக் கொடியினையுடையவர். இவர் திருவெண்காட்டில் எழுந்தருளியிருக்கும், கங்கையைச் சடையின் மத்தியில் வைத்த திறமையாளரான, சிவபெருமானன்றோ ?

பெரும் ஆரவாரத்தோடு பரந்து வந்த கங்கை நதியினைச் சிறு திவலையாக அடக்கித் தனது சடையில் வைத்தமையால் நமது சிவனார் சதுரர் எனப்பட்டார். வேறு எவராலும் செய்ய முடியாத காரியம் அல்லவா அது ?

3. பால், நெய், தயிர் முதலிய பல பொருட்களால் திரு மஞ்சனமாடுவார். தோலும் முப்புரிநூலும் பொருந்திய மார்பினையுடையவர். மேன்மக்கள் பரவித்துதிக்கின்ற திரு வெண்காடு மேவிய இவர் ஆலமரநீழலில் அமர்ந்த எமது தலைவரல்லரோ ?

4. ஞாழல், செருந்தி, நறுமணமுடைய புன்னை, தாழை ஆகிய மலர்கள் விளங்குவதும், வெண்ணிறமுடைய நாரை கள் அருகே தங்குகின்றதுமான கடற்கரையினையுடைய திரு வெண்காடு மேவிய யானையினை உரித்த பெருமான் யாழின் இசையினை உடைய நமது தலைவரல்லரோ ?

ஞாழல்—கொன்றையின் ஒருவகை. குங்குமமரம் என் பாரும் உளர். செருந்தி என்பது பொன்போலப்பூக்கும் ஒரு வகை மரம். 'செருந்தி காலையே கனகம் மலர்கின்ற சாய்க் காடே' என முன்னரும் அருளிச் செய்திருத்தல் காண்க.

5. பூதகணங்களையுடைய புனிதரும் புண்ணிய மூர்த்தி யும் தன்னை வழிபடுவோரது குற்றங்களையும் துன்பங்களையும் தீர்ப்பவரும் எமது தலைவருமான வேதமுதல்வர் திருவெண் காட்டில் அடியவர்கள் பாதந்தொழ எழுந்தருளியுள்ள பரம சிவனாரன்றோ ?

6. மண்ணுலகத்து மக்களும், விண்ணுலகத்தோரும், மற்றும் உள்ள தேவர்களும் தினந்தோறும் இறைஞ்சி வழிபட நின்ற எமது இறைவர், விண்ணளவும் உயர்ந்தபொழில்களைக் கொண்ட திருவெண்காடு மேவிய அண்ணல். அவரது திருவடிகளைத் தொழத்துன்பங்கள் இல்லையாம்.

7. அன்புடன் வழிபட்டவர்க்கு அருள்செய்தும், இந் திரனது ஐராவதம் என்ற வெள்ளையானை வழிபட நின்றவரு மான நெற்றிக்கண்ணுடைய நமது கடவுள், அற்புதம் அடைந்த மக்கள் பரவுகின்ற திருவெண்காட்டினை விரும்பி எழுந்தருளிய அச்சத்தைத் தரும் மழுப்படையினையுடைய பரமசிவனாரன்றோ ?

8. திருக்கயிலாய மலையினை அடியுடன் பெயர்த்தெடுக்க முயன்ற வலிய அரக்கனாகிய இராவணனது தலையையும் தோள்களையும் நெரித்துப் பின்னர் அவனுக்கே பேரருள் செய்த சங்கரர், பயனுடைய திருநீற்றினைத் தரித்தவர். இவர் திருவெண்காட்டில் எழுந்தருளியுள்ள, சடையில் அலையுடன் கூடிய கங்கையினைத் தரித்த, தலைவரன்றோ ?

9. இதழ்களையுடைய தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரம்மதேவனும், திருமாலும், முறையே திருமுடியையும் திரு வடியையும் காணத்தேடியும் அவர்கள் அவற்றைத் தெரிந்து கொள்ள முடியாதவராய் நின்றவரும், பலபலவேடங் கொண்டவரும் திருவெண்காட்டை மேவிய ஆடலை விரும்பிய எமது தலைவரல்லரோ ?

வேடமதுடைய—திருஞானசம்பந்தர் கோளறு பதிகத்தில் பலபல வேடமாகும் பரனாரிபாகன் என்றும், திருநாவுக்கரசர் அனைத்தும் வேடமாம் அம்பலக்கூத்தன் என்றும் அருளி யுள்ளது காண்க.

10. பௌத்தர்கள், சமணர்கள் ஆகிய வைதிகத்துடன் பொருந்துதல் இல்லாதவர்களுக்கு எவ்வளவு நீதிகளை எடுத் துரைத்தாலும் தீவினைகாரணமாக அவர்கள் அதனை நினைத் தும் பாராதவர். (அதனால் அவர்களைச் சாரேல் என்பது குறிப்பு) வேதமோதுபவர்கள் பரவித்துதிக்கின்ற திருவெண் காடு மேவிய ஆதியாகிய (அதாவது அனைத்துலகுக்கும் முதற்பொருளாகிய) சிவபிரானாரது திருவடிகளைத் தொழத் துன்பங்கள் இல்லையாம்.

11. நல்ல மக்கள் வாழ்கின்ற திருப்புகலி என்னும் சீகாழியுள் தோன்றிய திருஞானசம்பந்தன், செல்வனாகிய எமது சிவபெருமான் உறைகின்ற திருவெண்காட்டின் மேல் பாடிய அருமையான தமிழ்ப்பாடல்கள் பத்தும் சொல்லவல்ல வர்களது துன்பங்களோடு தொல்வினையும் அறுதல் என்பது நமது ஆணையாகும்.

துன்பங்களுக்குக் காரணம் வினையேயாதலின் துன்பங் களோடு அருவினையும் அறுதல் நமது ஆணை எனக் கூறி யருளினார்.

'அருந்தமிழ் பத்தும் வல்லவர் அல்லல்...... ஆணையே, என்றருளிச்செய்தமையால் ஏனையோரது அல்லலும் அரு வினையும் அருது என்பதாம்.

—சிவம்—

உ

சிவமயம்

# தென்திருமுல்லைவாயில்

பண்—பியந்தைக்காந்தாரம்] [2-ம் திருமுறை.

திருச்சிற்றம்பலம்

துளிமண்டி உண்டு நிறம்வந்த கண்டன்
நடமன்னு துன்னு சுடரோன்
ஒளிமண்டி உம்பர் உலகங்கடந்த உமை
பங்கன் எங்கள் அரனூர்
களிமண்டு சோலை கழனிக் கலந்த
கமலங்கள் தங்கு மதுவில்
தெளிமண்டி உண்டு சிறைவண்டு பாடு
திருமுல்லை வாயில் இதுவே. 1

பருவத்தில் வந்து பயனுற்ற பண்பன்
அயனைப் படைத்த பரமன்
அரவத் தொடங்கம் அவைகட்டி எங்கும்
அரவிக்க நின்ற அரனூர்
உருவத்தின் மிக்க ஒளிர் சங்கொடிப்பி
அவையோத மோத வெருவித்
தெருவத்தில் வந்து செழுமுத் தலைக்கொள்
திருமுல்லை வாயில் இதுவே. 2

வாராத நாடன் வருவார்தம் வில்லின்
உருமெல்கி நாளும் உருகில்
ஆராத இன்பன் அகலாத அன்பன்
அருள்மேவி நின்ற அரனூர்
பேராத சோதி பிரியாத மார்பின்
அலர்மேவு பேதை பிரியாள்
தீராத காதல் நெதிநேர நீடு
திருமுல்லை வாயில் இதுவே. 3

ஒன்றொன்றொ டொன்றும் ஒருநான்கொ டைந்தும்
இருமூன்றொ டேழு முடனாய்
அன்றின்றொ டென்றும் அறிவான வர்க்கும்
அறியாமை நின்ற அரனூர்
குன்றொன்றொ டொன்று குலையொன்றொ டொன்று
கொடியொன்றொ டொன்று குழுமிச்
சென்றொன்றொ டொன்று செறிவால் நிறைந்த
திருமுல்லை வாயில் இதுவே. 4

கொம்பன்ன மின்னின் இடையாளொர் கூறன்
விடைநாளும் ஏறு குழகன்
நம்பன்னெம் அன்பன் மறைநாவன் வானின்
மதியேறு சென்னி அரனூர்
அம்பன்ன ஒண்க ணவரா டரங்கின்
அணிகோ புரங்கள் அழகார்
செம்பொன்ன செவ்வி தருமாடம் நீடு
திருமுல்லை வாயில் இதுவே. 5

ஊனேறு வேலின் உருவேறு கண்ணி
ஒளியேறு கொண்ட ஒருவன்
ஆனேற தேறி அழகேறு நீறன்
அரவேறு பூணும் அரனூர்
மானேறு கொல்லை மயிலேறி வந்து
குயிலேறு சோலை மருவித்
தேனேறு மாவின் வளமேறி ஆடு
திருமுல்லை வாயில் இதுவே. 6

நெஞ்சார நீடு நினைவாரை மூடு
வினைதேய நின்ற நிமலன்
அஞ்சாடு சென்னி அரவாடு கையன்
அனலாடு மேனி அரனூர்

மஞ்சாரு மாட மனைதோறும் ஐயம்
உளதென்று வைகி வரினும்
செஞ்சாலி நெல்லின் வளர்சோ றளிக்கொள்
திருமுல்லை வாயில் இதுவே. 7

வரைவந் தெடுத்த வலிவாள் அரக்கன்
முடிபத்தும் இற்று நெரிய
உரைவந்த பொன்னின் உருவந்த மேனி
உமைபங்கன் எங்கள் அரனூர்
வரைவந்த சந்தொ டகிலுந்தி வந்து
மிளிர்கின்ற பொன்னி வடபால்
திரைவந்து வந்து செறிதேறல் ஆடு
திருமுல்லை வாயில் இதுவே. 8

மேலோடி நீடு விளையாடல் மேவு
விரிநூலன் வேத முதல்வன்
பாலாடு மேனி கரியானும் உன்னி
அவர்தேட நின்ற பரனூர்
காலாடு நீல மலர்துன்றி நின்ற
கதிரேறு செந்நெல் வயலில்
சேலோடு வாளை குதிகொள்ள மல்கு
திருமுல்லை வாயில் இதுவே. 9

பனைமல்கு திண்கை மதமா உரித்த
பரமன்ன நம்பன் அடியே
நினைவன்ன சிந்தை அடையாத தேரர்
அமண்மாய நின்ற அரனூர்
வனமல்கு கைதை வகுளங்கள் எங்கும்
முகுளங்கள் எங்கும் நெரியச்
சினைமல்கு புன்னை திகழ்வாச நாறும்
திருமுல்லை வாயில் இதுவே. 10

அணிகொண்ட கோதை அவள்நன்று மேத்த
அருள்செய்த எந்தை மருவார்
திணிகொண்ட மூன்று புரமெய்த வில்லி
திருமுல்லை வாயில் இதன்மேல்
தணிகொண்ட சிந்தை யவர்காழி ஞான
மிகுபந்தன் ஒண்ட மிழ்களின்
அணிகொண்ட பத்தும் இசைபாடும் பத்தர்
அகல்வானம் ஆள்வர் மிகவே. 11

திருச்சிற்றம்பலம்

| | |
|---|---|
| சுவாமி : | தேவி : |
| முல்லைவனநாதர் | கோதையம்மை |

**பதிகவரலாறு:** திருவெண்காட்டில் மெய்ப்பொருளாயி னுரை வணங்கிப் பதிகமாலை சாத்திய முத்தமிழ்விரகராம் திருஞானசம்பந்தர் அடியார்குழாம் புடைசூழத் திருமுல்லை வாயில் அடைந்து அங்குப் பெருமானைச் செந்தமிழ்மாலை சாத்தி வழிபட்ட திருப்பதிகம் இது. செந்தமிழ் என்பது செம்மைப் பொருளாகிய சிவத்தை அடைவிக்கும் தமிழ் எனச் சிறப்புப் பொருள்தரும். (செம்மை+தமிழ்=செந்தமிழ்).

**பதிகப் பொழிப்புரை:**

1. கடலினின்றும் பெருமளவில் தோன்றிய விஷத்தினை ஒரு சிறுதுளி எனவாக்கி உண்டு அதனுல் கருமை நிறம் வந் தடையப் பெற்ற கழுத்தினையுடைய திருநீலகண்டன்; நிலை பெற்ற நடனத்தினையுடைய ஒளிவடிவினன்; பேரொளிப் பிழம்பாக உலகங்கள் யாவையுங்கடந்து நின்றவன்; உமா தேவியாரைத் தனது ஒருபாகத்தில் கொண்டவன், இத்தகைய எங்களது சிவபெருமானது ஊர், மகிழ்ச்சியை மிகுதியாகக் கொடுக்கக் கூடிய சோலைகளிலும் வயல்களில் நிற்கும் தாமரை மலர்களிலும் தங்கும் தெளிந்ததேனை மிக உண்டு இறகுகளையுடைய வண்டுகள் இசை பாடுகின்ற திருமுல்லை வாயில் என்ற இதுவேயாகும்.

சோலைகளில் உள்ள மலர்களில் உள்ள தேனையும், தாமரை மலர்களில் உள்ள தேனையும் உண்டு வண்டுகள் பாடுகின்றன என்பதாம்.

2. அடியார்களுக்கு அருள்புரிய வேண்டிய தக்க தருணத்தில் வெளிப்பட்டுத் தண்ணளி செய்யும் தன்மையினை யுடையவன்; பிரம்மதேவனைப் படைத்த மேலான கடவுள்; தனது திருமேனியின் அங்கங்களில் பாம்புகளை அணிகலன் களாகக் கட்டி அவை எங்கும் ஒலிக்கும்படி விளங்கும் சிவ பெருமான். இத்தகைய பெருமானது ஊர், உருவத்தில் பெரி யதும் ஒளியுடன் கூடியதுமான சங்குகளும் சிப்பிகளும் கடல் அலைகள் மோத அதனால் அச்சங்கொண்டு தெருக்களில் வந்து செழுமையான முத்துக்களை ஈனும் திருமுல்லைவாயிலா கிய இதுவேயாகும்

சிவபெருமான் தனது வலப்பாகத்தினின்றும் பிரம்மதேவ னையும், இடது பாகத்தினின்றும் திருமாலையும் படைத்தருளி ஞர் என்பது புராணங்களின் கூற்று. "செங்கண்மால் தன்னை என்னைத் திண்டிறல் மொய்ம்பின் நல்கி...... .." என்று பிரம்ம தேவனது வாக்காகக் கந்தபுராணங் கூறுதல் காண்க.

மேலும் அப்பர் சுவாமிகளும் தமது தனித்திருத்தாண்ட கம் எட்டாவது திருப்பாடலில் 'படமூக்கப் பாம்பணையானோடு வானோன் பங்கயன் என்றங்கவரைப் படைத்துக் கொண்டார்' என்று அருளியிருத்தலும் கருதற்பாலது.

'அரவத்தொடங்கம் அவைகட்டி' என்பதற்கு பிரளய காலத்தில் இறக்கும் பிரம்ம விஷ்ணுக்களின் உடல்களைத் தாங்கி என்றும் கொள்ளலாம்.

3. சென்று அடைந்தவர்கள் மீண்டும் பூமியில் வந்து பிறவாத் தன்மையை அருளும் சிவலோகத்தினையுடையவன். வழிபடவருபவர்கள் தமது வில்போல் வளைந்து குறுகும் உடல் நாளும் உருகித் தான் என்னும் நினைப்பு நீங்கி சிவமயமாகிய

அவர்க்கு அடங்காத பேரின்பமாகவும் என்றும் அகலாத அன்புள்ளவனுகவும் இருப்பவன். இத்தகைய சிவபெருமான் அருளாகிய தனது சக்தியுடன் பொருந்தி நின்ற ஊர், குறை யாத ஒளியுடன் கூடிய கௌஸ்துபம் என்றமணி நீங்காது இருக்கும் திருமாலின் மார்பினில் வீற்றிருப்பவளாகிய மலர் மகள் நீங்காத காதலுடன் என்றும் பிரியாதவளாய் செல்வம் மிக்கு உண்டாகும்படி நிலைத்திருக்கும் திருமுல்லைவாயில் என்ற இதுவேயாகும்.

**வில்லின் உரு மெல்குதல்** என்பது வயது முதிர்ந்த காலத்து வில்லைப்போல உடல் வளைதல் அதாவது கூன் விழு தல். அம்மாதிரி உடல் வளையும் காலத்துக்கு முன்னரேயே இறைவனை உணர்ந்து பக்தி செய்து உருகுதல் வேண்டும் என உரைத்தார் எனக் கொள்க. அல்லது வானவில் போல் தோற்றங்காட்டி மறையும் தன்மைத்து இவ்வுடல் எனப் பொருள் கொண்டால், அங்ஙனம் அது அழியாத முன்ன மேயே இறைவனைப் பக்தி செய்து உருகுதல் வேண்டும் என்பது பெறப்படும். ஏனெனில் இந்த உடல் நமக்குக் கிடைத் தது நாம் இறைவனை வணங்கி முக்தியின்பத்தைப் பெறும் பொருட்டேயன்றோ?

4. ஒன்றோடு ஒன்றும் ஒன்றும் அதாவது மூன்று, அத னுடன் ஒரு நான்கும், ஒரு ஐந்தும், ஆறும், ஏழும் ஆக உள்ள இருபத்திஐந்து தத்துவங்கட்கும் அப்பாற்பட்டவன் ஈசன். இவைகளோடு உடனுயும் வேருயும், ஒன்ருயுமிருப்பான். இத் தகைய பெருமான் என்று ஞானிகளால் அறியப்பட்டு வான வர்க்கும் அறியாத நிலையில் நின்ற சிவபெருமானது ஊர், குன்றுகளும், பழக்குலைகளும், கொடிகளும் ஒன்றோடொன்று கலந்து ஒவ்வொன்றும் நிறைந்து செறிதலால் வளத்தைப் பெற்ற திருமுல்லைவாயிலாகிய இதுவேயாகும்.

தத்துவங்கள் இருபத்தி ஐந்து. அவை 1. மூலப்பகுதி (குணதத்துவ காரணம்), 2. புத்தி, 3. அகங்காரம், 4. மனம் :5. செவி, 6. மெய், 7. கண், 8. வாய் (நாக்கு) 9. மூக்கு,

10. வாக்கு 11. பாதம், 12. பாணி (கை) 13. பாயு, (மலவாயில்) 14, உபஸ்தம் (ஜனனேந்திரியம்) 15. சத்தம், 16. ஸ்பரிசம், 17. உருவம், 18. ரசம், 19. கந்தம், 20. ஆகாயம், 21. வாயு, 22. தேயு (அக்னி), 23. அப்பு (ஜலம்) 24. பிருதிவி (நிலம்) 25. புருஷன். இவற்றுள் முதல் இருபத்தி நான்கும் ஆன்மதத்துவங்கள் என்றும் இருபத்தி ஐந்தாவது புருட தத்துவம் எனவும் படும். இந்த இருபத்தைந்து தத்துவங்களைத் தவிர உலகம் வேறு இல்லை. (திருக்குறள் 27வது பாடல் பரிமேலழகர் உரை பார்க்கவும்). புருட தத்துவம் விஷ்ணு எனவும் படும். ஆகையினுல்தான் விஷ்ணுவை 'விஸ்வம்' என்று கூறுகிரோம். 'ஸர்வம் விஷ்ணு மயம்' ஜகத் என்றும் கூறுகிரோம். தத்துவங்கள் அனைத்திற்கும் அப்பாற்பட்டவனுகிய பரமசிவனை விஸ்வாதீதன் என்றும் தத்துவாதீதன் என்றும் கூறுகிரோம். ஸர்வம் என்பதையும் ஜகத் என்பதையும் தள்ளி அதற்கெல்லாம் அப்பாற்பட்டவனுனபடியால் **சிவமயம்** என்றே கூறுகிரோம். எனவே இத்தகைய தன்மையுள்ள சிவனை ஆராதிப்பவர்களே தத்துவங்களின் தன்மையை உணர்ந்தவர். அவர்களே முக்தியின்பத்துக்கு உரியவர்கள். இதைவிட்டு இருபத்தி ஐந்தாவது தத்துவமான விஷ்ணுவையே முடிவாகக் கொண்டு உபாசிப்பவர்களும் உண்டு.

இருபத்தி நான்கு தத்துவங்களையும் கொண்டு இருபத்தி ஐந்தாவது தத்துவமாக விளங்கும் ஆத்மா அல்லது புருஷ தத்துவம் வேறு. அதற்கும் மேம்பட்ட பரமாத்மாவாகிய மெய்ப்பொருளாகிய பரசிவம் வேறு என்று அறிவதே உண்மையான அறிவாகும். இந்த உண்மை அறிவினையே இத்திருப்பாடல் முதல் பகுதியில் போதித்துள்ளார் நமது ஆசாரியர் பெருமான்.

5. மின்னலைப் போன்ற இடையினையுடைய பூங்கொம்பு போன்ற உமையாளை ஓர் பாகமாக உடைய பெருமான், நாள் தோறும் எருதினை வாகனமாகக் கொண்டு ஏறும் இளமை

யுடையவன் (அழகன்), நமது தலைவன், நமது அன்பன். மறையினை முதன்முதலாக ஓதியருளிய நாவினையுடையவன் வானில் உலவும் மதியினைச் சூடிய தலையினையுடையவன், இத்தகைய பெருமானாகிய அரனது ஊர், அம்பு போன்று கூரியதும் ஒளியுள்ளதுமான கண்களையுடைய மகளிர் ஆடுகின்ற அரங்குகளின் கோபுரங்களும், அழகிய தோற்றச் சிறப்பைத் தருகின்ற மாடங்களும் நிலைபெற்றுள்ள திருமுல்லைவாயிலாகும்.

அழகிய கோபுரங்களும், செம்பொன்னின் செவ்விதரும் மாடங்களும் நீடு திருமுல்லைவாயில் என்பது கருத்து.

6. வேலினைப் போன்று கூரிய கண்ணினையுடைய உமாதேவியார் ஒரு பக்கத்திலே ஒளிபோலப் பிரகாசிக்கக் கொண்ட ஒப்பற்றவனாகிய பரமன், எருதின் மீது ஏறுபவன், அழகினை மிகச் செய்கின்ற திருநீற்றுப் பூச்சினையுடையவன், பாம்புகளை ஆபரணமாகப் பூண்டவன். இத்தகைய சிவ பெருமான் கோயில் கொண்ட ஊர், மான் ஏறும் கொல்லையும் மயிலும் குயிலும் ஏறும் சோலையும் பொருந்தித் தேன் நிறைந்த மலர்களில் ஏறும் வண்டுகளும் ஆடுகின்ற வளம் ஏறுகின்ற திருமுல்லைவாயிலாகிய இதுவேயாகும்.

கொல்லை என்பது காடு சார்ந்த இடமாகிய முல்லை நிலத்தைக் குறிக்கும் சொல். பின்னிரண்டடிகளின் திரண்ட கருத்து யாதெனில் மான்கள் நிறைந்த காடுகளும், மயிலும் குயிலும் நிறைந்த சோலைகளும், அச்சோலை மலர்களில் தேனுக்காக வண்டுகள் ஏறி ஆடுதலால் நல்ல வளத்தைக் காட்டுகின்ற திருமுல்லைவாயில் என்பதாகும்.

ஏறும் என்னும் சொல் வாகனம் ஏறுதல், உயர்தல், தொகையதிகரித்தல், மிகுதல் முதலிய பல பொருள்களில் வந்துள்ளது.

7. நெஞ்சத் தாமரையில் சிவபெருமானைத் தவிர வேறு ஒன்றை எண்ணாது நிலையாகத் தியானிப்பவர்களைச் சூழும்

வினைகள் அழிந்து போகும்படி அவர்களது உள்ளத்தில் நீங்காது உறையும் பரமன். ஆனைந்து எனப்படும் பஞ்ச கவ்வியத்தினுல் அபிடேகம் செய்யப்படுபவன். பாம்புகள் ஆடுகின்ற திருமேனியினையும், அனல் ஆடுகின்ற கரத்தினையு முடையவன். இத்தகைய பெருமானது ஊர், மேகங்கள் தவழ்கின்ற மாடங்களைக் கொண்ட மனைகள் தோறும் உணவு கிடைக்கும் என்று எண்ணி வருபவர்க்கு நல்ல உயர்ந்த செந்நெலரிசிச் சோறு அள்ளிக் கொடுக்கப்படுகிற திருமுல்லை வாயிலாகிய இதுவேயாகும்.

அரவாடு கையன் அனலாடு மேனியரன் என்பதை அரவாடு மேனியன் அனலாடு கையரன் என மாற்றிப் பொருள் கொளல் பொருத்தமுடைத்து. பிச்சையென்று வந்தவர்க்குங்கூட உயர்ந்த செந்நெலரிசிச் சோறே ஈயும் மக்கள் நிறைந்த ஊர் என்றதனுல் அவ்வூரிலுள்ளாரது உயர்ந்த தன்மையினைக் காட்டியதாயிற்று.

8. திருக்கயிலாய மலையினைப் பெயர்த்தெடுக்க வந்த அரக்கனது தலைகள் பத்தும் நெரியும்படிச் செய்தவனும், மாற்றுயர்ந்த செழும்பசும் பொன்னின் நிறங்கொண்ட உருவுடையவனும், உமையம்மையாரை ஒரு பங்கிலே கொண்டவனுமான எங்களது அரனுரின் ஊர், மலைப்பிரதேசங்களில் வளரும் சந்தனமரங்களையும் அகிற்கட்டைகளையும் தள்ளிக் கொண்டு வந்து விளங்குகின்ற பொன்னி (காவிரி) நதியின் வடப்பக்கத்தில் அலைகள் வந்து வந்து கரைகளில் உள்ள சோலைகளின்றும் பொழியும் தேனோடு கலக்கின்ற திருமுல்லை வாயிலாகிய இதுவேயாகும்.

9. மார்பின்மீது தவழ்கின்ற பூணூலையுடையவனும் விரிந்த நூலாகிய வேதத்தினை எப்போதும் ஓதிக் கொண்டிருப்பவனுகிய பிரம்மதேவனும், வேதங்களிலெல்லாம் முதல்வன் எனத் துதிக்கப்பட்ட பரமசிவனுடைய மேனியில் ஒரு பாகத்தில் உள்ளவனுகிய திருமாலும் முடியையும் அடியையும் முறையே காணும் குறிப்புடன் தேட (அவ

களறியாவண்ணம்) நின்ற மேலான நமது பெருமானது ஊர் காற்றில் அசைகின்ற குவளை மலரும் கதிர்கள் முற்றிய செந் நெற்பயிரும் உடைய வயல்களில் சேல், வாளை என்னும் மீன்கள் குதி கொள்ள நிறைந்து விளங்கும் திருமுல்லைவாயி லாகிய இதுவேயாகும்.

உமாதேவியாரைப் போலவே திருமாலும் ஒரு சமயம் தவஞ்செய்து பரமனின் இடப்பாகத்தைப் பெற்றார். ஆகை யால்வேத முதல்வன் பாலாடு மேனி கரியான் எனக் குறிப் பிட்டார். 'நாரணனை இடப்பாகத்து அடைத்தார் போலும் என்ற அப்பர்சுவாமிகளின் திருவீழிமிழலைத் திருத்தாண்டகத் திலும் இவ்விஷயம் குறிப்பிடப்பட்டுள்ளது.

10. பனைமரத்தின் அடிப்பாகம் போன்று திரண்டு உருண்டு இருக்கும் துதிக்கையினையுடையதும் மதம் மிக்கது மான யானையினை உரித்துப் போர்த்த மேலான பொருளாகிய நமது இறைவனுடைய திருவடிகளையே நினைக்கின்ற அத்தகைய சிறந்த சித்தத்தினை ஊழ்வினைகாரணமாக அடை யப்பெறாத பௌத்தர்களும், சமணர்களும் அழியும்படி நின்ற சிவபெருமானது ஊர், காடுகளில் மிகுந்து இருக்கும் தாழை, மகிழமரங்கள் இவைகளின் மொட்டுக்கள் எங்கும் நெருங்கி யிருக்கப் பூஅரும்புகள் நிறைந்த புன்னையின் நறுமணம் வீசு கின்ற திருமுல்லைவாயிலாகிய இதுவேயாகும்.

11. அழகுகொண்ட கோதையம்மை என்ற திருப்பெயர் கொண்ட இத்தலத்து அம்பிகை நன்கு துதித்துவணங்க அவ் வம்மைக்கு அருள்செய்த எந்தைபெருமானும், பகைவரது வலிமை கொண்ட மூன்று புரங்களையும் எய்த வில்லையுடைய வனுமாகிய பெருமானது திருமுல்லைவாயிலாகிய இத்தலத் தின்மேல் தணிந்த சிந்தைகொண்ட மக்கள் வாழும் சீகாழிப் பதியில் அவதரித்த திருஞானசம்பந்தன் பாடிய நன்மை மிகுந்த தமிழின் அழகிய பாடல்கள் பத்தையும் இசையுடன் பாடுகின்ற பக்தர்கள் அகன்ற வானுலகத்தை ஆள்வர்.

கோதையம்மை என்ற திருநாமத்துடன் இத்தலத்தில் அம்பிகை வழிபட்டுத் தக்ஷிணாமூர்த்தியிடம் திருவைந்தெழுத்து உபதேசம் பெற்றார் என்னும் வரலாற்றையே அணிகொண்ட கோதை ........அருள் செய்த எந்தை' என்று குறிப்பிட்டார்.

தணி கொண்ட சிந்தையவர் என்பது மனத்தில் ஏற்படும் விருப்பு வெறுப்புக்களாகிய உஷ்ணம் தணிந்து சமநிலைப் பட்ட உள்ளமுடையவர் என்று பொருள்படும். அல்லது பணிந்த உள்ளத்தினை உடையவர் என்றும் கொள்ளலாம். தாழ்வெனும் தன்மை என்று சுந்தரரும், தாழ்வுடைமனம் என்று திருஞானசம்பந்தர் தமது திருவேற்காட்டு திருப்பதிகத்திலும் கூறியது ஈண்டுக் கொள்ளற்பாற்று. ஒண்டமிழ் என்பது ஒண்மை + தமிழ் என்று பிரிந்து நன்மையைத்தரும் தமிழ் என்று பொருள்படும். ஒண்மை என்னும் சொல் நன்மை என்ற பொருளையும் தரும். ஈண்டுத்தமிழ்க்கு நன்மைதரும் தன்மை செம்மைப் பொருளை அடைவித்தலாகும். இக்காரணம் பற்றியே சேக்கிழார் பெருமான் இப்பதிகத்தினைச் செந்தமிழ்மாலை எனக் குறிப்பிட்டார்கள் என உணர்க.

—சிவம்—

---

## ஏன் பிறந்தார் மானிடராய் இன்று ?

சிவகருமஞ் செய்யார் திருநீறு சாத்தார்
தவநிலையாஞ் சைவநெறி சாரார்—அவனிதனில்
கான்பரந்த பச்சைக் களாநிழலைக் கைதொழார்
ஏன் பிறந்தார் மானிடராய் இன்று ?

—வரதுங்கராம பாண்டியர்

[குறிப்பு : பச்சைக் களாநிழல் என்பது கரிவலம்வந்த நல்லூரில் கோயில் கொண்ட திருக்களாவீசரைக் குறிக்கும்.]

சிவமயம்

# ஆணியாம் திருப்பதிகம்—1

## திருப்பிரமபுரம் (சீகாழி)

பண்—சீகாமரம்] [2-ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

எம்பிரான் எனக்கமுதம் ஆவானும் தன்னடைந்தார்
தம்பிரான் ஆவானும் தழலேந்து கையானும்
கம்பமா கரியுரித்த காபாலி கறைக்கண்டன்
வம்புலாம் பொழிற்பிரம புரத்துறையும் வானவனே. 1

தாமென்றும் மனந்தளராத் தகுதியராய் உலகத்துக்கு
ஆமென்று சரண்புகுந்தார் தமைக்காக்குங் கருணை-
யினான்
ஓமென்று மறைபயில்வார் பிரமபுரத் துறைகின்ற
காமன்றன் உடலெரியக் கனல்சேர்ந்த கண்ணானே. 2

நன்னெஞ்சே உனையிரந்தேன் நம்பெருமான் திரு-
வடியே
உன்னஞ்செய் திருகண்டாய் உய்வதனை வேண்டு-
தியேல்
அன்னஞ்சேர் பிரமபுரத்து ஆரமுதை எப்போதும்
பன்னுஞ்சீர் வாயதுவே பார்கண்ணே பரிந்திடவே. 3

சாநாளின் றிம்மனமே சங்கைதனைத் தவிர்ப்பிக்கும்
கோனாளுந் திருவடிக்கே கொழுமலர்தூ வெத்தனையும்
தேனாளும் பொழிற்பிரம புரத்துறையும் தீவணனை
நாநாளும் நன்னியமம் செய்தவன்சீர் நவின்றேத்தே.

கண்ணுதலான் வெண்ணீற்ருன் கமழ்சடையான் விடையேறி
பெண்ணிதமாம் உருவத்தான் பிஞ்ஞகன்பேர் பலவுடையான்
விண்ணுதலாத் தோன்றியசீர்ப் பிரமபுரம் தொழ விரும்பி
எண்ணுதலாம் செல்வத்தை இயல்பாக அறிந்தோமே

எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் தன்னடியார்க்கு
இங்கேயென் றருள்புரியும் எம்பெருமான் எருதேறிக்
கொங்கேயும் மலர்ச்சோலைக் குளிர்பிரம புரத்-துறையும்
சங்கேயொத் தொளிர்மேனிச் சங்கரன்றன் தன்மை-களே

சிலைபதுவெஞ் சிலையாகத் திரிபுரமூன் றெரிசெய்த
இலைநுனைவேல் தடக்கையன் ஏந்திழையாள் ஒரு கூறன்
அலைபுனல்சூழ் பிரமபுரத் தருமணியை அடிபணிந்தால்
நிலையுடைய பெருஞ்செல்வம் நீடுலகிற் பெறலாமே.

எரித்தமயிர் வாளரக்கன் வெற்பெடுக்கத் தோளொடு தாள்
நெரித்தருளும் சிவமூர்த்தி நீறணிந்த மேனியினன்
உரித்தவரித் தோலுடையான் உறைபிரம புரந்-தன்னைத்
தரித்தமனம் எப்போதும் பெறுவார்தாம் தக்காரே. 8

கரியானும் நான்முகனும் காணமைக் கனலுருவாய்
அரியானும் பரமேட்டி அரவஞ்சேர் அகலத்தான்
தெரியாதான் இருந்துறையும் திகழ்பிரம புரஞ்சேர
உரியார்தாம் ஏழுலகும் உடனாள உரியாரே. 9

உடையிலார் சீவரத்தார் தன்பெருமைஉணர்வரியான்
முடையிலார் வெண்டலைக்கை மூர்த்தியாம் திரு-
வுருவன்
பெடையிலார் வண்டாடும் பொழிற்பிரம புரத்-
துறையும்
சடையிலார் வெண்பிறையான் தாள்பணிவார்
தக்காரே. 10

தன்னடைந்தார்க்கு இன்பங்கள் தருவானைத்
தத்துவனைக்
கன்னடைந்த மதிற்பிரம புரத்துறையும் காவலனை
முன்னடைந்தான் சம்பந்தன் மொழிபத்தும் இவை
வல்லார்
பொன்னடைந்தார் போகங்கள் பலவடைந்தார்
புண்ணியரே. 11

திருச்சிற்றம்பலம்

பதிகவரலாறு :

தென்திருமுல்லைவாயிலைச் சென்றடைந்து அங்குப் பெருமானைச் செந்தமிழ்மாலை சாத்தி வணங்கிப் பிறகு மற்றும் உள்ள திருத்தலங்கள் சிலவற்றையும் தரிசித்த திருஞானசம்பந்தப்பிள்ளையார் திருமறையவர்கள் போற்றத் திருப்புகலி (சீகாழி) வந்து சேர்ந்தார். இத்துடன் அவரது இரண்டாவது தலயாத்திரை நிறைவு பெறுகிறது.

இரண்டாவது தலயாத்திரையினை இனிதே முடித்துத் திரும்பிய பிள்ளையார் திருத்தோணியில் எழுந்தருளிய இறைவரைத் தொழுது திருமுன்பு நின்று தூய ஆணியாம் திருப்பதிகம்பாடி அருட்பெருவாழ்வு பெருகச் சிவபெருமானைத் தினமும் போற்றும் விருப்பத்தின் மிக்கவராய் அங்கு எழுந்தருளியிருந்தார்.

தூய ஆணியாம் பதிகம் என்னும் சொற்றொடரில் ஆணி என்பது பொன்உரையாணியினைக் குறிக்கும். இது மாற்றறி

யாத செழும் பசும் பொன்னிஞல் அமைந்து ஏனைப்பொன்னை யெல்லாம் மாற்று உயர்வு தாழ்வு காண்பதற்கு அளவையாக உள்ளதாகும். அதுபோலவே ஆணியாம் திருப்பதிகம் என் பது உலகின் ஏனைப்பதிகங்களின் திறத்தினை அளவு காண் பதற்கு அளவுகோல் போன்ற திருப்பதிகம் எனப் பெரிய புராணப் பேருரை வகுத்த பெரியார் திரு. சி. கே. சுப்பிர மணிய முதலியாரவர்கள் விளக்கங் கூறியுள்ளார்கள். மேலும் அவர்கள் தமது உரைப்பகுதியில் இப்பதிகம் இன்னதென்று துணியக் கூடவில்லையென்றும், 'வண்டரங்கப் புனற்கமலம்' என்ற திருப்பதிகம்; 'எம்பிரான் எனக்கமுதமாவானும்' எனத் தொடங்கும் திருப்பதிகம் இவையிரண்டினுள் ஒன்ருயிருத்தல் கூடுமெனவும் கூறியுள்ளார்கள். அப்பெரியாரதுகருத்தினையே பெரும்பாலும் பின்பற்றும் நாம் இவ்விரண்டு பதிகங்களையுமே இத்தலைப்பில் கொடுத்துள்ளோம். திரு. வ. சு. செங்கல்வ ராயப் பிள்ளை, என்னும் சைவப்பேரறிஞர் 'வண்டரங்கப் புனற் கமலம்' என்று தொடங்கும் பதிகமே இவ்விரண்டினுள்ளும் சிறப்புடைத்து எனக்கருதியுள்ளார்கள். நாம் இரண்டினை யுமே ஆணியாம் திருப்பதிகமாகக் கருதி ஈண்டுக் கொடுத் துள்ளோம். அறிஞருலகம் இரண்டையுமோ அன்றி ஏற்ற ஒன்றினையோ ஆணியாம் திருப்பதிகமாக தேர்ந்தெடுத்துக் கொள்க எனப் பணிவுடன் வேண்டுகிருேம்.

**பதிகப்பொழிப்புரை:**

1. எனது தலைவனும், எனக்கு அமுதம் ஆவானும், தன்னைச் சரணமடைந்தவர்க்குத் தலைவனுவானும், தழல் ஏந்திய கையானும், அசைந்து வரும் பெரிய யானையினை உரித்தவனும், காபாலியும், கறையினையுடைய கழுத்தினை யுடையவனும், மணம் நிறைந்த பொழில்களையுடைய பிரம புரத்து உறைகின்ற வானவனுகிய நமது சிவபெருமானே யாகும்.

'பிரான்' என்ற சொல் தலைவன் எனப் பொருள்படும். பிரியன் அதாவது பிரியமுடையவன் என்ற பொருளில் பிரி யன் என்பது பிரானுக ஆயிற்று என்று கொள்பவரும் உளர்.

'அமுதம்' என்பது பாற்கடலைக்கடைந்து தேவர்கள் என்றும் மரணமடையாதிருக்கக் கொடுக்கப்பட்ட 'அம்ருதம்'. இது அமுதம் என மருவிற்று. மிகவும் உயர்ந்த இனிய பொருளை அமுதம் எனல் உலக வழக்கு. இறைவன் தனது அடியார்க்கு சாவாமையையும், பேரின்பத்தையும் தருதலால் அமுதம் ஆகின்றான்.

பிரமகபாலத்தைக் கையிலேந்திய கோலத்துடன் உள்ள மூர்த்தி காபாலி எனப்படுவர். சென்ற தமிழ்மாலையில் புராண வரலாறு காண்க. எம்பெருமான் உண்ட நஞ்சு கழுத்தில் நின்றமையால் கறைக்கண்டன் எனப்பட்டார். 'கறை' என்ற சொல் நஞ்சு என்ற பொருளையும் தரும்.

2. எக்காலத்தும் (தாழ்வு ஏற்பட்டபொழுதும்) மனந்தளராத தன்மையினையுடையவராய் இவ்வுலகத்துக்கெல்லாம் அடைக்கலம் தருபவன் இறைவன் ஒருவன்தான் என்ற உறுதியுடன் தன்னைச் சரணமடைந்தவர்களைக் காக்கின்ற கருணை மூர்த்தி, 'ஓம்' என்ற பிரணவத்துடன் ஆரம்பித்து வேதங்களைப் பயிலுபவர்கள் (ஓதுபவர்கள்) நிறைந்த பிரமபுரத்து உறைகின்றவனும், மன்மதனது உடல் எரியும்படிச் செய்த கண்ணினையுடையவனுமான சிவபிரானேயாகும்.

இவவுலகத்தவர் அடைக்கலம் புகவேண்டியஒரேகடவுள் சிவபெருமானேயாகும் என்பதை அறிந்து அவரையே சரணடைக என்று கூறியருளினர் என்க.

'ஓம்' என்று மறை பயில்வார் என்றமையால் திருஞான சம்பந்தர் காலத்தில் அந்தணர்கள் வேதம் ஓதும் முன் 'ஓம்' என்ற பிரணவத்தினையே உச்சரித்து ஓதி வந்தார்கள் என்பது அறியப்படுகிறது. அதற்கு முன்னரும் பின்னருங்கூட அவ்விதமே இருந்திருத்தல் வேண்டும். தற்பொழுது ஸ்மார்த்தப் பிராமணர்கள் சிலர் 'ஹரி: ஓம்' என்று ஆரம்பிப்பது வைஷ்ணவர்களது சகவாஸத்தினாலும் அவர்களுடைய பழக்க வழக்கங்கள் ஸ்மார்த்தரிடைபே ஊடுருவியதாலும் ஏற்பட்ட 'வைஷ்ணவ மோஹம்' என்பது கருதற்குரியதும் திருத்தம் பெற வேண்டியதுமாகும்.

3. நல்ல நெஞ்சமே ! உன்னை மிகவும் இரந்து வேண்டுகின்றேன். நீ உய்ய வேண்டும் (அதாவது நற்கதியடைய வேண்டும்) என்று விரும்பினால் நம்பெருமானது திருவடியிணையினையே ஸதாகாலமும் தியானம் செய்து கொண்டிருப்பாய். அன்னங்கள் சேர்கின்ற பிரமபுரத்து எழுந்தருளிய ஆரமுதாகிய நமது பெருமானை எப்போதும், வாயே ! நீ பாடுவாய். அவனது அழகிய கீர்த்தியினையே பாடுவாய். கண்ணே ! நீ எப்போதும் அந்தப் பெருமானின் திருவுருவையே அவர் திருவருள் கிடைக்குமாறு பார்த்திடுவாய்.

ஆசாரியர் பெருமான் இத்திருப்பாடலின் மூலம் தமது நெஞ்சு, வாய், கண் ஆகியவைகட்கு உபதேசிக்கும் முறையில் உலகத்தவர்க்கு உய்திபெறும் மார்க்கத்தை உபதேசித்தருளினர் என்க. இங்ஙனமே இன்னும் பலவிடங்களிலும் ஆசாரியர் நல்வழிப்படுத்தியுள்ளமை வருமிடங்களிலெல்லாம் கண்டு கொள்க. திருநாவுக்கரசு சுவாமிகளின் செல்கதி காட்டிடும் திருவங்கமாலை எனப் பெரிய புராணத்தில் போற்றப்பட்ட திருப்பதிகத்திலும் இவ்வாறே தலை, கண், வாய், செவி, மூக்கு முதலிய பொறிகளைச் சிவாராதனத்திலே ஈடுபடுத்தி உபதேசித்தமை காண்க. ஆதிசங்கரர் தமது சிவானந்தலஹரியிலும் நமது மனம், வாக்கு, கரங்கள், காதுகள், புத்தி, கண்கள் ஆகியவற்றை சிவபெருமானிடமே முறையே நினைத்தல், துதிபாடுதல், அருச்சித்தல் சிவகதைகளைக் கேட்டல், தியானித்தல், தரிசித்தல் ஆகிய செயல்களில் ஈடுபடுத்திப் பாடியுள்ளார். மேலும் அவர் சிவபெருமானைப்பாடுவதே நாக்கு, அவனைக் காண்பனவே கண்கள், அவனை அருச்சிப்பனவே கரங்கள், அவனைத் தியானிப்பவனே செய்ய வேண்டிய காரியத்தைச் செய்தவனாகிருன் என்றும் அருளிச் செய்துள்ளார். விரிவஞ்சி மேலும் மேற்கோள்கள் காட்டாது விடுத்தோம்.

4. மனமே ! சாகும் நாளினைப் பற்றிய ஐயப்பாட்டினைத் தவிரச் செய்யும் தலைவனாகிய பரமேசுவரனின் திருவடிக்கே எல்லா வகையாலும் அழகு மிக்க மலர்களைத் தூவி அருச்

சிப்பாய். தேன் நிறைந்த பொழில்களையுடைய பிரமபுரத் துறையும் நீவண்ணனாகிய பெருமானை அவனது புகழ்களை யெல்லாம், நாவே! நல்ல நியமங்களைச் செய்து நீ பாடி ஏத்துவாய்.

'நியமம்' என்பதை முன்னரும் 'நித்தலும் நியமஞ் செய்து' என்று தொடங்கும் திருச்சாய்க்காட்டுத் திருப்பதிக உரையில் விளக்கியுள்ளோம். தோத்திரம் செய்ய ஆரம்பிக்கும் முன்பாகத் தினசரி செய்ய வேண்டிய அனுஷ்டானங்களைச் செய்தலே நியமங்கள் எனப்படும்.

5. நெற்றியில் கண்ணுடைய பெருமான், வெண்ணீற்றுப் பூச்சினையுடையவன், (மலர்கள் நிறைதலால்) மணங்கமழ் கின்ற சடையினையுடையவென், எருதின்மேல் ஏறியவன், நன்மையைப் பயக்கும் மாதொருபாகன், தலைக்கோலமுடை யவன், பெயர்கள் பலவுடையவன், விண்ணுலகத்தோர்க்குச் சிறந்த பொருளாகத் தோன்றும் பெருமையினையுடையவன். இத்தகைய பெருமானது பிரமபுரத்தைத் தொழவிரும்பி அவனையே எண்ணுகின்ற செல்வத்தை நாம் உள்ளவாறு அறிந்தோம்.

உமையம்மையோடு கூடிய பரமனே அருள் புரியும் மூர்த்தியாகலின் பெண்ணிறமாம் உருவத்தன் என்றார். பிஞ் ஞகன்—தலைக்கோலமுடையவள், அதாவது சடையின் பின்னிய திருக்கோலம்.

எண்ணுதலாம் செல்வம் என்றது இறைவனை இடை விடாது தியானம் செய்யும் பெருநிலையையடைதல். இதுவே அழியாத செல்வம். இயல்பாக அறிந்தோமே என்பதற்கு இயற்கையாகவே நாம் இந்தக் கொள்கையினை அறிந்தோம் எனவும் கொள்ளலாம்.

6. எவ்விடத்திலேனும் எப்பிறவியிலேனும் பிறந்தாலும் அப்படிப் பிறந்திட்ட தன்னடியார்க்கு அங்கேயே அப்பிறவி யிலேயே விடையேறிவந்து அருள் செய்யும் எம்பெருமான்.

மணம் பொருந்திய மலர்ச் சோலைகளையுடைய குளிர்ந்த பிரம புரத்துறைகின்ற சங்கினையொத்து ஒளிவீசுகின்ற திருமேனியினையுடைய சங்கரனது இயல்பு இதுவாகும்.

தனது அடியவர்கள் எப்பிறவியில் எங்குபிறந்திட்டாலும் பிறவியையோ, பிறந்த இடத்தினையோ நோக்காது அங்கேயே அருள்புரிபவன் நமது சங்கரன் என்பது கருத்து. நன்மையைச் செய்பவன் என்ற பொருளைத்தரும் சொல் சங்கரன் என்பதாகும்.

வெண்ணீறு பூசிய திருமேனியுடைய பிரான் ஆகையால் சங்கே ஒத்து ஒளிர்கின்ற மேனி என்று அருளிச் செய்தார்.

7. மேருமலையினை வில்லாகக் கொண்டு ஆகாயத்தில் திரியும் தன்மையினையுடைய முப்புரங்களையும் எரி செய்த இலைபோன்ற நுனியினையுடைய வேலினைக்கொண்ட பெருமையுடைய கரத்தினையுடையவன். ஆபரணங்களையணிந்த பெருமாட்டியினை ஒரு பாகமாகக் கொண்டவன். அலைகளையுடைய நீரால் சூழப்பட்ட பிரமபுரத்துறைகின்ற இந்த அருமணி போல்வானாகிய பரமனை அடிபணிந்தால் நிலையான செல்வத்தை இந்த உயர்ந்த உலகத்தில் பெறலாம்.

சிவபெருமானைப் பணிவார்க்கே இந்த உலகினில் செல்வம் நிலைத்து நிற்கும் என்பதே பின்னிரண்டடிகளின் கருத்தாகக் கொள்ளலாம். அல்லது நிலையுடைய பெருஞ்செல்வம் என்பதை என்றும் அழியாததான முத்தித்திரு என்று கொண்டு அத்தகைய திருவினை உயர்ந்த உலகமாகிய சிவலோகத்திற்பெறலாம் என்று அருளிச் செய்தார் எனினும் அமையும்.

8. எரிபோன்ற நிறமுடைய தலைமயிரையுடைய வாளேந்திய கையனான இராவணன் திருக்கயிலாய மலையினைப் பெயர்த்தெடுக்க அப்போது அவனது தோளையும் தாளையும் நெரித்து அருள் செய்த சிவமூர்த்தியும், வெண்ணீறணிந்த திருமேனியனும், உரித்தபுலியின் தோலுடையவனும் ஆகிய

சிவபெருமான் உறைகின்ற பிரமபுரத்தினையே எப்போதும் மனதில் தரிப்பவர்களே மேன்மக்கள் ஆவர்.

அரக்கன் கயிலையைப் பெயர்த்தபோது அவனைப் பெருமானார் நெரித்ததே பின்னர் அவன் நாளும் (ஆயுளும்) வாளுமாகிய பேரருள் பெறக்காரணமாக அமைந்ததால் 'நெரித்தருளி' என்று அதனையே அருளாகக் குறிப்பிட்டார். சிவமூர்த்தி என்பது மங்களமூர்த்தி, மங்களத்தையளிக்கும் மூர்த்தி எனப்பொருள்படும். சிவம் என்ற சொல்லுக்கு மங்களம், நன்மை, சுபம், க்ஷேமம், கல்யாணம் முதலிய பல பொருள்கள் உண்டு.

சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் பிரமபுரத்தினையே எப்போதும் மனத்தில் தரிக்கும் அதாவது எப்போதும் நினைக்கும் மாந்தர்களே தக்கார் அல்லது மேன்மக்களாவர் என அவர்களது இலக்கணங் கூறியவாறு

9. கரியநிறமுடைய திருமாலும், நான்முகனும் காணாத வண்ணம் அரியவனாகிய அழல்உருவாய் நின்ற பரமேட்டி, பாம்புகள் சேர்ந்த மார்பினையுடையவன், இன்னதன்மையன் என்று எவர்க்கும் தெரியாதவன், இத்தகைய பெருமானது திகழ்கின்ற பிரமபுரத்தைச் சேர உரியவர்களே ஏழுலகத்தையும் உடன் ஆள உரிமையுடையவர்கள் ஆவார்.

10. உடையின்றித்திரியும் சமணர்களும், ஒருவகைச் சாயம் ஏற்றிய உடையினை அணியும் பௌத்தர்களும் தனது பெருமையினை உணரமுடியாதவனாயிருக்கும் பெருமையுடையவன். நாற்றம் பொருந்திய வெண்தலையினைக் கையிலேந்திய திருவுருவம் உடையவன். பெண்வண்டினோடு பொருந்தி வண்டுகள் விளையாடுகின்ற பொழில்களையுடைய பிரமபுரத்துறைகின்ற, சடையில் பிறைதங்கிய சிவபிரானின் தாள் பணிபவர்களே மேன்மக்களாவர். மீண்டும் தக்கார் இலக்கணங்கூறிய திருப்பாடல் இது.

11. தன்னைச் சரணமென அடைந்தவர்களுக்குச் சிற்றின்பம் பேரின்பம் ஆகிய இருவகையின்பங்களையும் தரு

பவனை, மெய்ப்பொருளாயினுனை, கற்களால் ஆன மதில்களை யுடைய பிரமபுரத்து உறையும் உயிர்க்கெல்லாங் காவலனுகிய பெருமானை, இறைவனை முன்னமேயே சரணடைந்து அருள் பெற்றவனுகிய ஞானசம்பந்தன் மொழியாகிய இவைபத்தும் வல்லார்கள் பொன்னினை அடைந்தவர்கள், போகங்கள் பல அடைந்தவர்கள், மற்றும் அவர்கள் புண்ணியங்கள் பல செய்தவரும் ஆவர்.

பொன் என்பது பொருளையும், போகம் என்பது அதனுல் துய்க்கப்படும் இபங்களையும் குறித்து நின்றது. புண்ணியம் என்பது அறத்தைக் குறிக்கும். எனவே அறம், பொருள், இன்பம் என்ற மூன்றும் கூறப்பட்டமை காண்க. உபலட்சணத்தினுல் பின்னர் பெறும் வீட்டின்பத்தையும் கொள்க. 'அறம், பொருள், இன்பம், வீடு அடைதல் நூற்பயனே' என்றபடி திருஞானசம்பந்தரின் திருப்பதிகங்கள் இந்நான்கு புருஷார்த்தங்களையும் அளிக்கவல்லன என்றருளிச் செய் துள்ளதை உய்த்துணர்க.

—சிவம்—

---

# ஆணியாம் திருப்பதிகம்—2

## திருத்தோணிபுரம்

[சீகாழி]

பண்-பழந்தக்கராகம்] [1-ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

வண்டரங்கப் புனற்கமல
  மதுமாந்திப் பெடையினொடும்
ஒண்டரங்க இசைபாடும்
  அளியரசே ஒளிமதியத்
துண்டரங்கப் பூண்மார்பர்
  திருத்தோணி புரத்துறையும்
பண்டரங்கர்க் கென்னிலைமை
  பரிந்தொருகால் பகராயே. 1

எறிசுறவங் கழிக்கானல்
  இளங்குருகே என்பயலை
அறிவுறு தொழிவதுவும்
  அருவினையேன் பயனன்றே
செறிசிறார் பதமோதுந்
  திருத்தோணி புரத்துறையும்
வெறிநிறார் மலர்க்கண்ணி
  வேதியர்க்கு விளம்பாயே. 2

பண்பழனக் கோட்டகத்து
  வாட்டமிலாச் செஞ்சூட்டுக்
கண்பகத்தின் வாரணமே
  கடுவினையேன் உறுபயலை

செண்பகஞ்சேர் பொழில்புடைசூழ்
திருத்தோணி புரத்துறையும்
பண்பனுக்கென் பரிசுரைத்தால்
பழியாமோ மொழியாயே 3

காண்டகைய செங்காலொண்
கழிநாராய் காதலால்
பூண்டகைய முலைமெலிந்து
பொன்பயந்தா ளென்றுவளர்
சேண்டகைய மணிமாடத்
திருத்தோணி புரத்துறையும்
ஆண்டகையாற் கின்றேசென்று
அடியறிய உணர்த்தாயே. 4

பாராரே எனையொருகால்
தொழுகின்றேன் பாங்கமைந்த
காராருஞ் செழுநிறத்துப்
பவளக்காற் கபோதகங்காள்
தேராரும் நெடுவீதித்
திருத்தோணி புரத்துறையும்
நீராருஞ் சடையாருக்கு
என்னிலைமை நிகழ்த்தீரே. 5

சேற்றெழுந்த மலர்க்கமலச்
செஞ்சாலிக் கதிர்வீச
வீற்றிருந்த அன்னங்காள்
விண்ணோடு மண்மறைகள்
தோற்றுவித்த திருத்தோணி
புரத்தீசன் துளங்காத
கூற்றுதைத்த திருவடியே
கூடுமா கூறீரே. 6

முன்றில்வாய் மடற்பெண்ணைக்
குரம்பைவாழ் முயங்குசிறை
அன்றில்காள் பிரிவுறுநோய்
அறியாதீர் மிகவல்லீர்
தென்றலார் புகுந்துலவுந்
திருத்தோணி புரத்துறையும்
கொன்றைவார் சடையார்க்கென்
கூர்பயலை கூறீரே. 7

பானுறு மலர்ச்சூதப்
பல்லவங்கள் அவைகோதி
ஏனோர்க்கு மினிதாக
மொழியுமெழில் இளங்குயிலே
தேனுரும் பொழில்புடைசூழ்
திருத்தோணி புரத்தமரர்
கோனுரை என்னிடத்தே
வரவொருகாற் கூவாயே. 8

நற்பதங்கள் மிகவறிவாய்
நானுன்னை வேண்டுகின்றேன்
பொற்பமைந்த வாயலகிற்
பூவைநல்லாய் போற்றுகின்றேன்
சொற்பதஞ்சேர் மறையாளர்
திருத்தோணி புரத்துறையும்
விற்பொலிதோள் விகிர்தனுக்கென்
மெய்ப்பயலை விளம்பாயே. 9

சிறையாரு மடக்கிளியே
இங்கேவா தேனொடுபால்
முறையாலே உணத்தருவன்
மொய்பவளத் தொடுதரளம்

துறையாருங் கடல்தோணி
புரத்தீசன் துளங்குமிளம்
பிறையாளன் திருநாமம்
எனக்கொருகால் பேசாயே. 10

போர்மிகுத்த வயல்தோணி
புரத்துறையும் புரிசடையெம்
கார்மிகுத்த கறைக்கண்டத்
திறையவனை வண்கமலத்
தார்மிகுத்த வரைமார்பன்
சம்பந்த னுரைசெய்த
சீர்மிகுத்த தமிழ்வல்லார்
சிவலோகஞ் சேர்வாரே. 11

திருச்சிற்றம்பலம்

சுவாமி : பிரமபுரீசுவரர் — தேவி : திருநிலைநாயகி
தோணியப்பர் — பெரிய நாயகி

**பதிகச்சிறப்பு :**

பதிகவரலாற்றினை முன்னர்க் கண்டோமாதலால் இப் பதிகச்சிறப்பினை மட்டும் ஈண்டுக் காண்போமாக.

தலைவனைப் பிரிந்த காமமயக்கத்தால் தலைவி அஃறிணைப் பொருள்களையும் தூதுவிடுப்பதாகச் செய்யுள் செய்தல் புலவர் மரபு. அஃறிணைப் பொருள்களை அங்ஙனம் அழைத்துக் கூறுதலைக் காமமிக்க கழிபடர் கிளவி என அகப் பொருளிலக்கணம் கூறும். இந்த முறையில் தலைவனாகிய தோணிபுரத்தீசனைப் பிரிந்த தலைவியாகத் தன்னைக் கொண்டு அவ்வாறு பிரிந்ததனால் ஏற்பட்ட துயரந்தாங்காது வண்டு, அன்னம், நாரை, சேவல், குயில், கிளி முதலியவற்றை அழைத்துத் தன்னிலையைத் தோணிபுரத்தீசனுக்கு அறிவிக்க வேண்டும் முறையில் அமைந்தது இத்திருப்பதிகம்.

தாஸமார்க்கம், சகமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சன் மார்க்கம் என்னும் நன்னெறி நான்கினுள் தலைவனும் தலைவியு மாய் ஈசனும் உயிரும் ஈடுபடுகின்ற சன்மார்க்க நெறியில் அமைந்த இத்திருப்பதிகத்தில் திருஞானசம்பந்தரது ஏனைய திருப்பதிகங்களில் உள்ளபடி இராவணனை நெரித்த வரலாறு, அரியயன் காணாத அழலுருவாய் நின்ற தன்மை, சமணர் புத்தரது கொள்கைக் கண்டனம் ஆகியவை இல்லாமல் இறை வனைப் பிரிந்த உயிரினது உள்ளக்கிடக்கை மட்டுமே உணர்த் தப்படுதல் காண்க. இப்பதிகத்தினை ஆணியாம் திருப்பதிகம் எனச் சான்றோர்கள் கொண்டமைக்கும் இதுவே காரணமா யிருத்தல் கூடும்.

தலைவனைக்கூடி இன்புற்ற தலைவி பின்னர் பிரிவினால் ஏற் பட்ட ஆற்றாமையைப் புள்ளினங்களைத் தூதனுப்பும் முறை யில் அவைகள் தன்னுடன் பேசுவன போலவும், அவை தனது ஏவலைக்கேட்பன போலவும் அவைகளுடன் மொழிந்து ஆற்றுதலாக அமைந்தது எனக் கொள்வதேயன்றி, திருத் தோணி புரத்தீசனைக் கண்டு காமுற்ற மங்கை நல்லா ளொருத்தி அவனையடையப்பெறாது வருந்திய நிலையில் புள் ளினங்களை நோக்கித் தன்னிலையை அவர்பால் சென்று கூறு மாறு வேண்டுவது இப்பதிகம் என்று கொள்ளினும் அமையும்.

1. வளப்பமான அலைகளையுடைய நீர்நிலையில் தாமரை மலரில் உள்ள தேனாகிய மதுவினை அருந்திப் பெண்வண் டோடு ஒழுங்கான அலைபோன்ற இசையினைப்பாடுகின்ற அரச வண்டே! ஒளிவிடுகின்ற பிறைச்சந்திரனை அணிந்தவரும், எலும்பாகிய ஆபரணம் பூண்டவரும், திருத்தோணிபுரத்து உறைபவரும் பண்டரங்கம் என்ற திருக்கூத்தாடியவருமான பரமசிவனார்க்கு எனது நிலைமையினை (அதாவது நான் அவரது பிரிவாற்றாமையால் படுந்துன்பத்தினை) அவர் அறிந்து அருள் செய்யும் வண்ணம் எனக்காகப் பரிந்து ஒருமுறை சென்று கூறுவாயாக.

வண்டரங்கம் என்பது வண் தரங்கம் எனவும் ஒண்டரங்கம் என்பது ஒண் தரங்கம் எனவும், துண்டரங்கம் என்பது துண்டர் அங்கம் எனவும் பிரியும். பண்டரங்கம் என்பது திரிபுரஸம்ஹார காலத்தில் சிவபிரானுர் ஆடிய திருக்கூத்து. அத்திருக்கூத்தினையுடையவர் பண்டரங்கர் எனப்பட்டார். அளி என்னும் சொல் வண்டு என்றும் அன்பு என்றும் பொருள்படுமாகையால் தனது அன்பினையே வண்டாக உருவகித்தாள் எனவும் கொள்ளலாம்.

2. சுறுமீன்களை எறிகின்ற உப்பங்கழிகளின் அருகே கடற்கரைச் சோலைகளில் விளங்குகின்ற இளங்குருகே! தலைவரது பிரிவாற்ருமையாலே எனது மேனியில் உண்டான பசலை என்னும் நோயின் துன்பத்தை நீ அறியாமலே விலகிச் செல்வதும் என்னுடைய கொடிய வினைப்பயனேதான். எனவே நீ கூட்டமாகச் செறிந்த சிறுவர்கள் வேதமந்திரங்களை ஓதும் திருத்தோணிபுரத்துறைகின்ற மணமும் நிறமும் பொருந்திய மலர் மாலைகளைத்தரித்த வேதியனுகிய சிவபிரானுக்குப் பசலை நோயினுல் நான்படும் துன்பத்தினைக் கூறுவாயாக.

பசலை என்பது தம் தலைவரைப் பிரிந்த மகளிர்க்குக் காம மிகுதியால் ஏற்படும் நோய். உடல் நிறம் மாறுபடுதல் இதன் தன்மை என்பர். 'என் பயலை அறிவுருதொழிவதும்' என்பது இளங்குருகானது தனது பசலைத்துன்பத்தை அறிந்து தானுகவே தூது சொல்ல முன்வரவில்லையே எனக்கூறி அதுவும் தன்னுடைய வினையின் பயனே என்று வருந்தினுள் என்க. அன்றித் தனது பசலைநோயினைத் தலைவர் அறியாது இருப்பதுவும், தன்னுடைய கொடிய வினையின் பயனே என்று குறை நேர்ந்தாள் எனப்பொருள் கொள்ளினும் அமையும். குருகு என்பது நாரை போன்றதொரு நீர்வாழ் பறவை.

3. பண்பட்ட வயல்களின் கரைகளில் சம்பங்கோரைப் புதர்களில் வசிக்கும் சிவந்த உச்சிக்கொண்டையினையுடைய வாட்டமில்லாத சேவலே! செண்பகமலர்கள் பொருந்திய

பொழில்கள் சூழ்ந்த திருத்தோணிபுரத்து உறையும் பண்பு கள் யாவும் நிறைந்த எனது தலைவனுக்குக் கொடிய வினை யேனுன நான் அடைந்த பசலைத்துன்பத்தின் தன்மையினை உரைத்தால் அது உனக்குப் பழியாகுமோ ? (பழியாகாது; ஆகையால் நீ சென்று உரைப்பாய் என்று கூறியபடி).

4. பார்ப்பதற்கு அழகிய சிவந்த கால்களையுடையதும், ஒளிமிக்கதும், உப்பங்கழிகளில் உலவுகின்றதுமான நாரையே! ஆகாயமளவும் உயர்ந்த அழகிய மாடங்கள் நிறைந்த திருத் தோணி புரத்து உறைகின்ற ஆண்டகையாகிய பெருமானுக்கு அவர்மீது கொண்ட காதலால் எனது ஆபரணங்கள் அணிந்த அழகிய முலைகள் தளர்ந்து (அதாவது காமத்தினுல் உடல் இளைத்து) பொன்னிறமான தேமலும் பெற்றுள் (நிறம்மாறி பசலையடைந்தாள்) என்று இன்றே சென்று (அவர் அருள் புரிய வேண்டிய) காரணத்தை அறியும்படி உணர்த்துவாயாக இவ்வாறு உணர்த்தினுல தலைவர் மனமிரங்கி உடனே விரைந்து வந்து தலைவியைக்கூடி அவளது துயரைப் போக்கி அருள் செய்வார் என்பது கருத்து.

5. பக்கத்திலே அமைந்த கருநிறம் பொருந்திய அழகிய நிறமுடைய மாடப்புருக்களே, உங்களைத் தொழுகின்றேன். தேர்கள் ஓடுதலையுடைய நீண்ட வீதிகளையுடைய திருத் தோணிபுரத்து உறையும் இறைவர் என்னை ஒருமுறையேனும் பாராமல் இருக்கின்றுரே. நீர் நிறைந்த சடையினையுடைய அவருக்கு எனது நிலைமையினைக் கூறுவீராக.

'பாராரே எனையொருகால் தொழுகின்றேன்' என்பதற்கு நான் இதற்குமுன் தூதுசொல்ல அழைத்த வண்டு, குருகு, சேவல், நாரை ஆகியவைகள் என்னை ஒரு முறையும் திரும் பிப்பார்க்கவும் இல்லை. அவைகள் தூது செல்வது எங்ஙனம்? எனவே நீவிர் எனது நிலையினைத் தலைவர்க்கு அறிவிக்க உடனே முனைதல் வேண்டும். உங்களைத் தொழுது வேண்டு கின்றேன் எனப் புருக்களிடம் கூறினுள் எனக்கொள்ளினும் பொருத்தும். கபோதங்காள் என்றும் பாடம் உண்டு. கபோத

கங்கள் என்பது சிறிய புருக்களைக் குறிக்கும். அவைகளே மாடப் புருக்களாம்.

6. சேற்றில் முளைத்த கமலமலர்களின் மீது இருபுறங்களி லும் செந்நெற்கதிர்கள் சாமரங்கள் போல் வீச அரசனைப் போல் வீற்றிருக்கும் அன்னங்களே! விண்ணுலகத்தோடு மண் ணுலகத்தையும் அதனுடன் நான்கு வேதங்களையும் தோற்று வித்த திருத்தோணிபுரத்து ஈசனது, அஞ்சாத்தன்மையினை யுடைய இயமனை உதைத்த திருவடியைச் சென்று அடையு மாறு (எனது நிலையினை அவரிடம்) கூறுவீர்களாக.

'துளங்காத கூற்றுவன்' என்றது எதற்கும் அஞ்சாத இய மனும் அஞ்சும்படி இறைவனுர் அவனை உதைத்தனர் என்பது பற்றியாகும்.

7. வாயிற்புறத்திலே மட்டைகளோடு கூடிய பனைமரத் திலே கட்டிய கூடுகளில் தழுவியிருக்கின்ற சிறகுகளையுடைய அன்றிற் பறவைகளே! நீங்கள் பிரிவுத்துன்பத்தினை அறிய மாட்டீர்கள். ஆயினும் மிக வல்லவர்கள். தென்றற்காற்று புகுந்து உலவுகின்ற திருத்தோணிபுரத்து உறைகின்ற கொன் றைமலர் மாலையினை அணிந்த சடையினையுடைய ஈசனுக்கு எனது மிகுந்த பசலைநோயினைப் பற்றிக் கூறுவீர்களாக.

அன்றில் பறவைகள் எப்பொழுதும் ஆணும் பெண்ணும் இணைபிரியாதிருப்பவையாகும். எனவே அவைகளைப் பிரிவு நோய் அறியாதவர்கள் எனக் கூறினுள்.

8. பால் மணக்கின்ற மலர்களையுடைய மாமரங்களின் தளிர்களைத்தின்று எல்லோருக்கும் கேட்க இனிமையாகக் கூவுந்தன்மையுடைய இளங்குயிலே! தேன் பொருந்திய மலர்ச்சோலைகள் பக்கங்களில் சூழ்ந்த திருத்தோணிபுரத்துத் தேவர்கள் தலைவனுன எனது தலைவனை என்னிடத்தே வரும் படி அழைத்து ஒருமுறை கூவுவாயாக.

'என்னிடைக்கே' என்றும் பாடம் உண்டு. பால் நாறு மணம் என்றது மாம்பூக்களின் மணத்தினைக் குறித்ததாகும்.

9. அழகமைந்த அலகினையுடைய நாகணவாய்ப் பட்சியே ! தூது சொல்வதற்குரிய நல்ல வாய்ப்புகளை நீ நன்கு அறிவாய். எனவே உன்னை வேண்டுகின்றேன், போற்று கின்றேன். சொல்லப்படுகின்ற 'பதம்' என்னும் முறையில் வேதங்கள் ஓதுதலைச் செய்யும் வேதியர்கள் வாழ்கின்ற திருத்தோணிபுரத்து உறைபவனும், வில்விறல் அழகுடன் விளங்கும் திருத்தோளினையுடையவனுமான திறமையாளனை சிவபெருமானுக்குப் பிரிவாற்றுமை காரணமாக எனது உடலில் தோன்றிய பசலை நோயினைப்பற்றி விளம்புவாயாக.

10. சிறகுகளையுடைய மடக்கிளியே! இங்கு வருவாயாக. தேனுடன் பாலும் முறையாக உண்பதற்கு உனக்குத் தருவேன். கூட்டமாக நெருங்கியிருக்கின்ற பவளத்துடன் முத்துக்களும் துறைகளில் பொருந்துகின்ற கடலையுடைய தோணிபுரத்தீசனும், ஒளிமிகும் இளம்பிறைச்சந்திரனைத் தரித்தவனுமாகிய எனது பெருமானின் திருநாமத்தினை எனக்கு ஒருமுறை கூறுவாயாக.

பிரிவுத்துன்பத்தில் மூழ்கிய தலைவி தலைவன் நேரில் வந்து தண்ணளி செய்யக் காலம் நீட்டித்தாலும் அவனது பெயரை உச்சரிக்கக் கேட்டு அவ்வாறு கேட்கும் அளவி லாவது துன்பம் மறந்து இன்பமடையக் கருதினாள் என்க.

11. வைக்கோல் போர்கள் மிகுதியாக உடைய வயல் களையுடைய தோணிபுரத்துக் கோயில்கொண்ட முறுக்கிய சடையினைக் கொண்ட எமது கருமை நிறம் மிகுந்த விஷ முண்ட கண்டத்து இறைவனை, தாமரைமலர்மாலையணிந்த மலை போன்ற மார்பினை உடையவனை திருஞானசம்பந்தன் உரைத்த சிறப்பு மிக்கதான இந்தத் தமிழ் மறையினைச் சொல்லவல்லவர்கள் வீடுபேருன சிவலோகஞ் சென்றடை வார்கள். மீண்டும் பூமியில் வந்து பிறக்கமாட்டார்கள் என்றவாறு.

—சிவம்—

## திருப்பாடல் முதற்குறிப்பகராதி

திருப்பாடல் முதற் குறிப்பகராதி முற்றிற்று.

---

## சம்பந்தா! எலும்பு நின்பால் திருமால் ஏன் பெண்ணுக்கிக் கொண்டிலன் ?

இடுகாட்டுள் மாதர் எலும்பிற் புரள்மால்
சுடுகாட்டுள் ஆடுவாற் சுட்டி—ஞெடுகாட்டும்
சம்பந்தா என்புநின்பால் தந்தாக்கிக் கொண்-டிலனென்
கும்பந்தாம் என்னுமுலைக் கொம்பு

—நால்வர் நான்மணி மாலை.

சுடுகாட்டில் ஆடல்புரிவாராகிய சிவபெருமானை (பெம்மான் இவன்) எனச் சுட்டிக் காட்டிய ஞானசம்பந்த மூர்த்தியே! சுடுகாட்டிலே பிருந்தையின் எலும்பிலே புரண்ட திருமால், அந்த எலும்பினை நின்பால் தந்து கலசம் போன்ற தனங்களையுடைய ஓர் பெண்ணாகச் செய்து கொண்டாரில்லையே! அங்ஙனம் செய்து கொள்ளாமைக்குக் காரணம் யாதோ ? (இயம்புவீராக என்றபடி)

உ

சிவமயம்



திருச்சிற்றம்பலம்

மட்டிட்ட புன்னையங் கானல் மடமயிலைக்
கட்டிட்டங் கொண்டான் கபாலீச் சரமமர்ந்தான்
ஒட்டிட்ட பண்பின் உருத்திர பல்கணத்தோர்க்கு
அட்டிட்டல் காணாதே போதியோ பூம்பாவாய்.

கானமர் சோலைக் கபாலீச் சரமமர்ந்தான்
தேனமர் பூம்பாவைப் பாட்டாகச் செந்தமிழான்
ஞானசம் பந்தன் நலம்புகழ்ந்த பத்தும்வல்லார்
வானசம் பந்தத் தவரொடும் வாழ்வாரே.

திருச்சிற்றம்பலம்

—திருஞானசம்பந்தர் அருளிய
திருமயிலைப் பூம்பாவைப் பதிகம்

B

உ

சிவமயம்

# வாழ்த்து

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே

திருச்சிற்றம்பலம்

—திருஞானசம்பந்தர் அருளியது



மொழிக்கு மொழி தித்திக்கும்

# மூவர் தமிழ் மாலை

## சம்பந்தர், அப்பர், சுந்தரர் அருளிய தேவார திருப்பதிக வெளியீடு

சைவ சமயாசாரியர் நால்வரில் மூவர்முதலிகள் என்று சிறப்பித்துக் கூறப்படும் சம்பந்தர், அப்பர், சுந்தரர் ஆகிய மூவரது தேவாரப் பதிகங்கள் முதல் 7 திருமுறைகளாக அமைந்துள்ளன. இவை மொத்தம் 795 பதிகங்களும் 8237 திருப்பாடல்களும் ஆகும். இவைகளைப் பதிகங்களுடன், பதிக வரலாறு, தலமகிமை, விசேட உரை ஆகியவைகளுடன் 108 பகுதிகளாக வெளியிட்டு ஒவ்வொன்றையும் ஒரு தமிழ் மாலையாக இறைவனுக்குச் சமர்ப்பிக்க திட்டமிடப்பட்டு தற்சமயம் மூன்று பகுதிகள் வெளிவந்துள்ளன. அடுத்தபகுதிகள் ஒவ்வொன்றுப் வெளிவரும். சைவ மெய்யன்பர்கள் இந்த நூல் வெளியீட்டில் சிறந்த பங்கெடுத்து எழில்மிகு ஞான பூசைப் பணியில் ஈடுபடக்கோருகிறேன்.

| | ரு—பை |
|---|---|
| ஒவ்வொரு பகுதியும் தனிப்பிரதி | 2—00 |
| 6 பகுதிகள் சலுகை விலை | 10—00 |
| 108 பகுதிகளுக்கும் சலுகை விலை | 101—00 |

சலுகை விலைகள் முன்பணமாகச் செலுத்தப்படவேண்டும் ரூ 101/– தொகையை மட்டும் தவணைகளாக ஓராண்டுக்குள் செலுத்தலாம்.

உரையாசிரியர்–பதிப்பாசிரியர்
ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா
5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு,
மேலமாம்பலம், சென்னை-600033

Printed at : Elango Achukkoodam 166, R